# நறுமணம் நிலவட்டும்...
# வியர்க்குரு விலகட்டும்.

இது ஒரு அற்புதமான உணர்வு. நைஸில் லாவெண்டர்; லாவண்டர் மற்றும் கோலோனின் புதுமணத்துடன் மேனியைத் தழுவிடும் ஓர் அழகிய உணர்வு. இன்றே முயன்று பாருங்கள். இதை மிகவும் விரும்புவீர்கள்.

புதிய

**நைஸில்**

**லாவெண்டர்**




வியர்க்குருவை எதிர்த்திடும்.
லாவெண்டர், கோலோனின் நறுமணம் பரப்பிடும்.

1511

ரொம்ப சிக்கலான ஒரு பிரச்னை! என் பொண்ணைக் கட்டிக்கணும்னா மானா வாரியாச் சொந்தக்காரங்க இருக்கிற குடும்பமா இருக்கணும்,' என்று பெண்ணைப் பெற்றவர் நிபந்தனை போட, அந்தப் பெண்ணைத்தான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று ஆசைப்படும் அனாதை மோகனை வாழ வைக்க, அவனிடம் பாச நேசம் கொண்ட ஆபீஸ் மானேஜர், சகாக்கள், சாப்பாட்டுக் கூடை ஆயா உள்பட சொந்தக்காரர்கள் (சொந்தம் 16) வேடம் போட்டுக் கொண்டு ஒரு வீடு செட்டப் செய்ய, அந்தக் 'குடும்பத்துடன்' பெண்ணும் தகப்பனும் வந்து தங்கும் அந்தப் பதினைந்து நாட்கள்... எந்த நிமிஷம் குட்டு உடையப் போகுதோ என்ற கலகலப்பான சஸ்பென்ஸ்!

நீண்ட இடைவெளிக்குப் பின்னர் மோகன் — சிக்கென்று பொருத்தமான பாத்திரத்தில். அவரைச் சுற்றித்தான் அத்தனை கிரகங்களும். ஒவ்வொருத்தரிடமும் அவர் காட்டும் செல்ல உறவாடலில் நல்ல இதம். தான் ஜோடி சேருவதற்கு முன்னால் இரண்டு ஜோடிகளைச் சேர்த்து வைப்பதில் அவர் காட்டும் அக்கறை, செயல்பாட்டில் நிஜக் கதாநாயகனின் அந்தஸ்தைப் பெறுகிறார்.

கதாநாயகியாய் வரும் புதுமுகம் தேறி விடுவார். கிராமத்து நாணம் கலந்த அந்தக் காதல் பார்வையை விடுங்கள். பலவந்தமாய் இழுத்துக் கொண்டு ஊர் திரும்ப பஸ் ஏறிய தந்தையிடம் சந்திரசேகர் வந்து, மோகன் உயிருக்குப் போராடிக் கொண்டிருப்பதாகவும் கடைசி ஆசையாய்ப் பெண்ணைப் பார்க்க விரும்புவதாயும் சொல்லும் போது, பிடிவாதக்காரத் தந்தையிடம் திமிறிக் கொண்டு போராடும் துடிப்பு, நெஞ்சம் பரிதாபம் படுபாந்தம்.

பெண்ணின் தகப்பனார் அருள்சுத்தி பரமசிவம் பிள்ளை படுதோரணைதான். அவர் கிராமத்து மௌடீகமா, எல்லாம் தெரிந்த வல்லாள கண்டரா என்பது குழப்படிதான் என்றாலும், யதார்த்தம்.

மோகனுக்கு அடுத்த பங்கு சந்திரசேகருக்குத்தான். உற்ற தோழர். பளிச்சென்று சிரித்துக் கொண்டு நண்பனுக்கு உதவ, அவருக்கு ஆபத்து வரும் போது துடிக்க — இப்படியொரு நண்பர் நமக்கு இல்லையே என்று பொறாமைப்பட வைக்கிறார்.

'எனக்கு ஒரு பேரன் இருந்தான். உன்னைப் போலத்தான் இருப்பான்,' என்று மோகனின் கன்னம் வழித்து நட்டி முறித்துப் பாட்டி ஸ்தானத்துக்குத் தம்மை உயர்த்திக் கொண்டு விட்டார் மனோரமா. மெட்ராஸ் பாஷையில் கலகலப்பும் உருக்கமும் கலந்தடித்து நிலைத்து விட்டார்.

எஸ். எஸ். சந்திரன், சீப் அக்கௌண்டண்ட் தெலுங்கு கோவை சரளாவிடம் காதலாதிக்கம் செலுத்த ஆபீஸில் சந்தர்ப்பம் இல்லாத தவிப்பை அவருக்குக் கணவராய் நடிக்க வேண்டிய சந்தர்ப்பத்தில் 'ஆமாண்டி வாடி போடி' என்று விளாசித் தீர்த்துக் கொள்வது வேடிக்கை.

எந்த நிமிஷத்திலும் தும்மலாம் என்ற ரீதியில் முகத்தை வைத்துக் கொண்டு, 'யா அல்லா' என்று அலுத்துக் கொள்ளும் அடடே மனோகருக்கு பிந்துகோஷிடம் அப்படியொரு கவர்ச்சி. அவரை பிந்து மூளைச் சலவை செய்வதும் அவர் துவள்வதும் புதுச் சுவை.

அப்பளக் குழவி இடிவாங்கும் தியாகுவின் தாம்பத்ய வினோதத்தில், கூலிக்கு நடிக்க வந்த டிஸ்கோ சாந்தி கூட்டுச் சேர, அதனால் முளைக்கும் கலாட்டா தனிக் கதை. தேவலையே டி. சாந்தி. படு அனாயாசமாய்க் குப்பத்து ராசாத்தியாய்க் கொப்புளிக்கிறார்.

பாவம், செந்திலைத்தான் ரொம்ப ஓரம் கட்டி விட்டார்கள்.

என்ன... ஒரு மேடை நாடகத்தைப் பார்க்கிற மாதிரி இருக்கிறது — காட்சியமைப்புகளும் வசனமும் என்றாலும் ஒரு செண்டிமெண்ட் கலந்த நகைச்சுவை நிகழ்ச்சிகள் வாய் விட்டுச் சிரிக்க வைக்கின்றன என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

கடைசி நேரத்தில் மட்டும் கதை பண்ணி விட்டார்கள். மற்றபடி கலகலதான்!

— பி. எஸ். எஸ்.

# சொந்தம்—16



# போஃபோர்ஸை விடப் பெரிய ஸி.ஏ.ஜி. பூமராங்!



● வானமாமலை

''ஸி. ஏ. ஜி. யாமே, ஸி.ஏ.ஜி! மரியாதை என்ன வேண்டிக் கிடக்கிறது? ஸி. ஏ. என்று சொல்லுங்கள் போதும்!'' என்று மத்திய அமைச்சர் பாய்வது போல அரசியல் ஜோக் போடுமளவுக்கு (ஹிந்து நாளிதழ்) பிரதம கணக்குத் தணிக்கை அதிகாரியின் பதவியைக் காங்கிரஸ் அமைச்சர்களும் எம். பிக்களும் இழிவுபடுத்திப் பேசிவிட்டனர். ஸி. ஏ. ஜி. பதவியின் சிறப்புக்கள், தனித்தன்மைகள் பற்றிப் பிரபல வழக்கறிஞர் வானமாமலை இங்கு விளக்குகிறார்...

நிருபர்: சி. ஏ. ஜி. எப்படி நியமிக்கப்படுகிறார்?

வானமாமலை: உயர்நீதிமன்ற, உச்சநீதிமன்ற நீதிபதிகளைப் போல, குடியரசுத் தலைவரால் நேரடியாய் நியமிக்கப்படுகிறவர். இவருக்குத் தணிக்கை அனுபவம் மட்டுமின்றி, நிர்வாக அனுபவமும் இருக்க வேண்டும். பதவிக்காலம் ஆறு ஆண்டுகள்.

நிரு: இவரது பணிகள் என்னென்ன?

வான: அரசாங்கம் செய்யும் செலவுகள் சரியான முறையில் அமைந்துள்ளனவா என்று பார்ப்பதும், தவறான செலவுகளைச் சுட்டிக்காட்டுவதும்தான்.

நிரு: இவரது அதிகாரங்கள் பற்றி...?

வான: சி.ஏ.ஜி., அரசாங்கத்தின் அல்லது ஆளுங் கட்சியின் விருப்பு, வெறுப்புகளுக்கு உட்பட்டுப் பணிபுரிய வேண்டிய அவசியமில்லை. பொதுத்துறை நிறுவனங்கள் உட்பட அரசாங்கத்தின் எந்த ஓர் அங்கமான அமைப்பையும், தமது தணிக்கைக்கு உட்படுத்தலாம். இவரது பணியில் எவரும் குறுக்கிட முடியாது. கணக்குத் தணிக்கை அதிகாரி, தமது பதவிக் காலத்துக்குப் பின் எந்த ஒரு அரசுப் பதவியையும் ஏற்றுக் கொள்ளக் கூடாது என்பது விதி. இவருடைய தணிக்கை அறிக்கை ஜனாதிபதியிடம் முதலில் சமர்ப்பிக்கப்பட்டு, அவரது கையெழுத்துடன் பார்லிமெண்ட்டின் இரு சபைகளிலும் வைக்கப்படும்.

நிரு: தணிக்கை அதிகாரியைப் பதவி நீக்கம் செய்ய முடியுமா?

வான: அதற்கான விதிமுறைகள் மிகக் கடுமையானவை. இவர் மீது ஏதாவது



● மரியாதை என்ன வேண்டிக் கிடக்கு...!

"You're showing a lot of respect by calling him CA ji — CA will do..."

## டி. என். சதுர்வேதி: — இன்றைய ஸி. ஏ. ஜி.



- உத்தரப்பிரதேச ஐ. ஏ. எஸ். அதிகாரி. ஆனாலும் ராஜஸ்தான் முதலமைச்சராக இருந்த மோகன்லால் சுகாடியாவின் நன்மதிப்பைப் பெற்றதால் ராஜஸ்தானத்தில் பதவிகள் வகித்தவர்.
- நிறையப் புத்தகங்கள் படிப்பார். அவருடைய சொந்த நூலகத்தில் ஏராளமான புத்தகங்கள் வைத்திருக்கிறார். நெருங்கிய நண்பர்கள், அதிகாரிகள் வீட்டுக்கு வந்தால் பெருமையுடன் நூல்களைக் காண்பிப்பார்.
- படு சிம்பிள் மனிதர். உயர்ந்த பதவி வகித்த போதும் அலட்டிக் கொள்ளவே மாட்டார்.
- தெய்வ நம்பிக்கை மிகுந்தவர்; கோயில்களுக்குப் போவார்.
- ராமகிருஷ்ணா மிஷன் போன்ற சேவை ஸ்தாபனங்களிடமும் அவற்றில் உழைப்பவர்களிடமும் மிகுந்த மதிப்புக் காண்பிப்பார்.

— எஸ். வி. என்.

குற்றம் சாட்டப்படுமானால், அது சந்தேகத்துக்கு இடமின்றி நிரூபிக்கப்பட வேண்டும். அதன்பின், இவரைப் பதவி நீக்கம் செய்யும் தீர்மானங்கள், நாடாளுமன்றத்தின் இரு சபைகளிலும் தனித்தனியே நிறைவேற்றப்பட வேண்டும். அதிலும் ஒரு கண்டிஷன் உண்டு. சபையின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கையில், மெஜாரிடி ஆதரவும், அவையில் இருக்கும் உறுப்பினர்கள் எண்ணிக்கையில் மூன்றில் இரண்டு பங்கு பேர் ஆதரவும் பெற்றால்தான் தீர்மானம் நிறைவேறியதாகக் கருதப்படும். மேலும் பாராளுமன்றத்தின் ஒரேகூட்டத் தொடரின் போது தீர்மானம் நிறைவேற வேண்டும். இதன் பிறகு, இவரை ஜனாதிபதி மட்டுமே உத்தரவு போட்டு, பதவி நீக்கம் செய்யலாம்.

திரு: இப்போது கிளம்பியுள்ள பிரச்னை பற்றி...?.

வான: தணிக்கை அறிக்கையில் கூறப்பட்டுள்ள விஷயங்கள் குறித்து, விமர்சிக்கலாம்; விளக்கமளிக்கலாம்; ஆனால், அந்த அதிகாரியின் பதவிக்குக் களங்கம் உண்டாகும்படி விமர்சிப்பதும், ஏசுவதும் சரியல்ல.

பேட்டி: **எஸ். சந்திரமௌலி.**

# "பிரதமருக்கு எல்லாமே விளையாட்டாக இருக்கிறது!"

## —மேனகா காந்தி சிறப்புப் பேட்டி

**உள்ளே நுழைந்ததும் அடக்கமான வீட்டுக்குள்ளிருந்து ஒரு நாய்ப்படை வெளிப்பட்டு நம்மை வரவேற்கிறது. மேனகா காந்தியின் பாதுகாப்பில் இருக்கும் தெரு நாய்களாம் அவை! மேனகாவுக்குக் கல்லூரி மாணவியின் உருவம். ஒப்பனையே இல்லாத எளிய தோற்றம். கலகல பேச்சு. வசீகரச் சிரிப்பு. வேகமான பதில்கள். அவ்வப்போது அவற்றில் அடிமனத்து ஏமாற்றமும் வேதனையும் எட்டிப்பார்க்கின்றன.**

கேள்வி: இந்தியா முழுவதும் நீங்கள் சஞ்சய் காந்தியின் மனைவி என்றே அறியப் படுகிறீர்கள். நீங்கள் இப்பொழுது முன்பு சஞ்சய் காந்தியை எதிர்த்த எதிர்க் கட்சித் தலைவர்களுடன் சேர்ந்து எதிர்க் கட்சியில் இருக்கிறீர்கள். உங்களின் இந்த நிலை மக்களுக்கு உங்களிடம் ஓர் அவநம்பிக்கையை ஏற்படுத்தாதா?

மேனகா காந்தி: நான் எதிர்க் கட்சியில் இருக்கிறேன் என்பது உண்மை. ஆனால் அந்தக் கட்சியில் இருப்பவர்கள் எல்லாம் சஞ்சயை எதிர்த்தவர்கள் என்று சொல்வது சரியில்லை. ஜனதா தளத்தில் இருக்கும் ஐம்பது சத உறுப்பினர்கள் இந்திரா காந்தியுடன் இருந்தவர்கள். 'ஜனதா தளம்' என்பதில் 'ஜனதா' என்கிற பதம் இருப்பதால் ஜனதா கட்சிக்கும் எங்கள் கட்சிக்கும் வித்தியாசம் புரியாமல் குழம்புகிறார்கள். பல கட்சிகள் ஒன்றுபட்டு ஜனதா தளம் உருவானது. அதனுள் சஞ்சய் ராஷ்ட்ரிய மஞ்சும் இணைந்தது. வாழ்க்கை விசித்திரமானது. சஞ்சய்யுடன் இருந்த பாதிப் பேர் என்னுடன் இருக்கிறார்கள் என்றால் சஞ்சயை எதிர்த்தவர்களில் பாதி, ராஜீவுடன் இருக்கிறார்கள்!

கேள்வி: நீங்கள் எதிர்க்கட்சியில் சேர்ந்ததன் காரணம் என்ன? காங்கிரஸ் கட்சியின் மீது ஏற்பட்ட ஏமாற்றமா அல்லது நேரு குடும்பத்திலிருந்து விலகி வந்ததால் ஏற்பட்ட கோபமா?

மேனகா: கோபத்தினாலோ, மன வருத்தத்தாலோ நான் அரசியலில் நுழைந்திருந்தால், இத்தனை நாட்களுக்கு என்னால் தொடர்ந்து அதில் இருந்திருக்க முடியாது. அரசியல் பாதை மிகவும் கடுமையானது. சஞ்சய் இருந்தவரை நான் அரசியலில் ஆர்வமில்லாமல் இருந்தேன். அப்பொழுது எனக்கு ரொம்பவும் இளம் வயது. அதிகக் கஷ்டம் தெரியாமல் வளர்ந்தவள். பிறகு துன்பத்தைச் சரமாரியாக அனுபவிக்க நேர்ந்த போதுதான் எனக்கு விழிப்பு ஏற்பட்டது. முன்பிருந்த காங்கிரஸ் கட்சிக்கும் இப்போதிருக்கும் காங்கிரஸுக்கும் சம்பந்தமேயில்லை. காங்கிரஸ் கட்சியிடம் ஏமாற்றமா என்கிறீர்கள்! எனக்கு அக் கட்சி பற்றிய மயக்கங்கள் இருந்ததில்லை.

கேள்வி: எமர்ஜென்ஸி காலத்தின் போது நடந்த அடாவடித்தனத்துக்குக் கார



> ''தமிழகத்தில் ராஜீவ் காந்தி செய்த தேர்தல் பிரசாரங்கள் — 'கறுப்புக் கண்ணாடி — கறுப்பு இதயம்' என்ற பேச்சுக்கள் டூன் ஸ்கூல் சிறு பிள்ளைத்தனம் போல் இருந்தது...''





ணம் சஞ்சய் காந்திதான் என்று இன்னும் மக்கள் பரவலாக நம்புகிறார்கள். பின்னோக்கிப் பார்க்கும் போது, இதில் உண்மை இருப்பதாக உங்களுக்குப்படுகிறதா? எதிர்க் கட்சியில் நீங்கள் சேர்ந்ததற்கே, அதற்கான பரிகாரம் தேடுவதற்குத்தான் என்று சொல்லலாமா?

மேனகா: நான் என்ன நினைக்கிறேன், நினைக்கவில்லை என்பது முக்கியமில்லை. எது உண்மை என்பதுதான் முக்கியம். எமர்ஜென்ஸிக்குப் பிறகு ஆட்சிக்கு வந்த ஜனதா கட்சி ஷா கமிஷன் மூலம் விசாரணை நடத்தியது. நூற்றுக்கணக்கான பேர் விசாரிக்கப்பட்டார்கள். ஒருத்தர் கூட சஞ்சய்க்கு எதிராகச் சாட்சி சொல்லவில்லை. 'இந்த ஆள்தான் எங்களை அப்படிச் செய்யச் சொன்னார்' என்று சஞ்சய் பற்றிச் சொல்லவில்லை. ஏன்? ஜனதா கட்சிதானே ஆட்சியில் இருந்தது! உண்மை அதுவாக இருந்தால் சஞ்சய்க்கு எதிராகச் சாட்சி சொல்லியிருக்கலாமே? எமர்ஜென்ஸி என்பது ஓர் அரசியல் ஆயுதம். அதன் மூலம் நிறைய பேர் கைதானார்கள். பத்திரிகைச் சுதந்திரம் பறிக்கப்பட்டது. இவை இரண்டுக்கும் சஞ்சய்க்கும் சம்பந்தமிருந்ததாக இன்றும் யாரும் சொல்ல மாட்டார்கள். அப்போது நடந்த ஒரு சம்பவத்தைச் சொல்கிறேன்... கல்கத்தாவில் ஒரு பிரபல பத்திரிகையாளர் இருந்தார். அவர் தமக்கு எதிராக எழுதுகிறார் என்கிற கோபத்தில் சித்தார்த்த சங்கர் ரே அவரைச் சிறையில் தள்ள நினைத்தார். பத்திரிகையாளர் தப்பி வந்து சஞ்சயிடம் அடைக்கலம் கேட்டார். அப்பொழுது எங்களுக்குச் சொந்தமான ஒரு ஃப்ளாட் இருந்தது. அதில் ஒரு மாத காலம் சஞ்சய் அவரை ஒளித்து வைத்திருந்தார். சஞ்சய்க்கு மக்கள் நினைத்தது போல் அரசியல் அதிகாரம் இருந்திருந்தால் ரேயிடம் ஒரு டெலிஃபோன் மூலம் 'இந்த ஆளைக் கைது செய்யாதே' என்று சொல்லியிருக்கலாமே? குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தை அமுல் செய்தவர் சஞ்சய் என்பதால் ஜனங்கள் எமர்ஜென்ஸி காலத்தில் நடந்த எல்லாமே சஞ்சயினால் விளைந்தவை என்று நினைக்க ஆரம்பித்து விட்டார்கள்.

கேள்வி: எமர்ஜென்ஸி என்பது விரும்பத்தகாத ஒன்று என்று நம்புகிறீர்கள் அல்லவா?

மேனகா: ஆம்; எமர்ஜென்ஸி என்பது பல வடிவங்களில் காரணமில்லாமல் இன்றும் இருக்கிறது என்றும் நான் நம்புகிறேன். எமர்ஜென்ஸியைப் பற்றிய முக்கிய குற்றச்சாட்டு 'மிசா' சட்டத்தின் மூலம் ஆயிரக்கணக்கான பேர் அப்போது சிறையில் அடைக்கப்பட்டதுதான். அதே 'மிசா' இன்று 'என்.எஸ்.ஏ.' என்று உலவுகிறது. காரணமேயில்லாமல் ஆயிரக்கணக்கான பேர் கைதாகிறார்கள். எமர்ஜென்ஸி காலத்தில் இருந்ததை விட இப்போது அதிகமானவர்கள் சிறையில் இருக்கிறார்கள். யாரும் ஒன்றும் சொல்வதில்லை! பத்திரிகை சுதந்திரம் அடிக்கடி பறிக்கப்படுகிறது. 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' அலுவலகம் சோதனை செய்யப்பட்டது — 'இந்தியன் போஸ்ட்' மூடப்பட்டது — நியூஸ் பிரிண்ட் விலையேற்றம் என்பதெல்லாமே வெகு சாமர்த்தியமான தணிக்கைகள். முட்டாள்கள்தான் முழுத் தணிக்கை செய்வார்கள். அந்த முட்டாள்தனம்தான் எமர்ஜென்ஸியின் போது நடந்தது. இப்போது சுதந்திரம் பறிக்கப்படுவது தெரியாமலேயே பறிக்கப்படுகிறது. நாமும் அதற்குப் பழகி விட்டோம்! முன்பு மக்களுள் ஒருவராக இந்திரா காந்தி இருந்தார். இப்போது மக்களுக்கும் தமக்கும் சம்பந்தமேயில்லை என்கிற எட்டாத உயரத்தில் ராஜீவ் இருக்கிறார்!

கேள்வி: உங்களுக்கும் இந்திரா காந்திக்கும் இருந்த உறவைப் பற்றிச் சொல்லுங்கள். கடைசியில் அவரிடமிருந்து நீங்கள் விலக



**...முட்டாள்கள்தான் முழுத் தணிக்கை செய்வார்கள். அந்த முட்டாள் தனம்தான் எமர்ஜென்ஸியின் போது நடந்தது. இப்போது சுதந்திரம் பறிக்கப்படுவது தெரியாமலேயே பறிக்கப்படுகிறது...**

வும் நேர்ந்ததே!

மேனகா: மிக அழகான உறவாக இருந்தது அது — என் கணவர் இருக்கும் வரை. கணவர் இறந்த பிறகு எல்லாம் மாறி விட்டது. என்ன காரணம் என்று இன்னும் எனக்குச் சரியாகப் புரியவில்லை. நான் அப்பொழுது மிகவும் சிறியவள் — 23 வயது. இந்திரா காந்திக்கும் எனக்கும் வயதில் மிகப் பெரிய இடைவெளி இருந்தது. இருவரும் அவரவர் துக்கத்தைப் பகிர்ந்து கொள்ள முடியாமல் போய் விட்டது. இருவரும் மனம் விட்டுப் பேசியிருந்தால் நிலைமை சரியாகியிருக்கலாம். உறவுக்காரர்கள் பலவிதமாக அவரிடம் என்னவோ சொல்லி அவர் மனசைக் கெடுத்து விட்டார்கள். திடீரென்று கணவன் இறந்த அதிர்ச்சியில் நான் இருந்தேன். ஆதரவு கிடைக்க வேண்டிய சமயத்தில் கிடைக்காமல் போனதில் ரொம்பத் துன்பம் அனுபவித்தேன். பின்னால்தான் தெரிந்தது, சொத்து விஷயமாகத்தான் எல்லாப் பிரச்னையும் என்று. அது முன்பே தெரிந்திருந்தால் எனக்குச் சொத்தே வேண்டாம் என்று எழுதிக் கொடுத்திருப்பேன். கணவனே போன பிறகு எனக்கு வேறு என்ன வேண்டும்? அதெல்லாம் முடிந்து போன கதை. இந்திரா காந்தி என்ன தவறுகள் செய்திருந்தாலும், ஒன்று நிச்சயம், தமது குடும்பத்தை விட அவர் இந்தியாவை நேசித்தார்; இந்திய மக்களை நேசித்தார். அவர்களது முன்னேற்றமே அவருடைய லட்சியமாக இருந்தது. அந்த லட்சியம் இப்பொழுது தலைமையில் இருப்பவரிடம் இல்லை. வாழ்க்கையில் புடம் போடும்படியாக எந்த அனுபவங்களும் இல்லாமல் சொகுசாக வளர்ந்தவருக்குச் சாதாரண மக்கள் அன்றாடம் படும் பாடு எப்படித் தெரியும்?

கேள்வி: ராஜீவ் காந்தியின் அரசு பற்றி உங்கள் கருத்து என்ன?

மேனகா: ரொம்ப மோசமான அரசு. பிரதமரின் பாத்திரத் தன்மையைத்தான் அரசும் பிரதிபலிக்கும். எதையும் தீவிரத்துடன் நினைக்கும், அணுகும் சுபாவம் ராஜீவுக்குக் கிடையாது. அதே பொறுப்பற்ற தன்மையைத்தான் மற்ற அமைச்சர்களும் பிரதிபலிக்கிறார்கள். பிரதமருக்கு எல்லாமே விளையாட்டாக இருக்கிறது!

கேள்வி: போஃபோர்ஸிலிருந்து பல்ராம் ஜாக்கரின் பசும்புல் வளர்ப்பு ஊழல் வரை அரசு ஜீரணித்துக் கொண்டு இருக்கிறது. இதைப் பற்றி உங்கள் கருத்து என்ன?

மேனகா: ஜீரணித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதற்குக் காரணம் நமக்கு (எதிர்க் கட்சிக்கு) அதை வெளியேற்றத் துப்பில்லாமல் போனதுதான். அதனாலேயே மக்கள் அதை ஜீரணித்துக் கொண்டு விட்டதாக அர்த்தமில்லை.

கேள்வி: காங்கிரஸ் கட்சியிடம் மக்களுக்குச் சோர்வு ஏற்பட்டுப் போனாலும், எதிர்க் கட்சிகள் ஏதும் நம்பிக்கை அளிக்கும்படியாக இல்லையே? உங்கள் ஜனதா தளத்தில் எத்தனை உட்பூசல்கள்? காங்கிரஸ் ஊழலைப் பற்றிச் சொல்கிறீர்கள்... உங்கள் கட்சிக்காரர்கள் பல பேரின் மேல் ஊழல் புகார் இருக்கிறதே?

மேனகா: ஒரு கட்சி என்றால் பலதரப்பட்டவர்களும் இருக்கத்தான் செய்வார்கள். நான் அதை மறுக்கவில்லை. ஆனால் ஜனதா தளத் தலைவர் ரொம்ப ஒழுக்கமுள்ள

## உறையைப் பிரித்தால் ஷாக்!

கடலூரில், எல். ஐ. சி. யின் குரூப் இன்சூரன்ஸ் திட்டத்தின் கீழ், குடும்பத் தலைவர்களை இழந்த நலிந்த குடும்பங்களுக்கு இன்சூரன்ஸ் தொகை வழங்கும் விழா — (தலைமை கலைஞர்). சம்பந்தப்பட்டவர்களுக்கு ஈட்டுத் தொகை கவர்கள் வழங்கப்பட்டன. ஆனால் கவரைத் திறந்து பார்த்தபோது, ஷாக்! ஆம், செக் இல்லை! இது ஏன்? குரூப் இன்சூரன்ஸ் திட்டத்துக்கு அரசின் பங்கான பிரீமியத் தொகையைத் தமிழ்நாடு அரசு இன்னும் கட்டவில்லை. எனவே, ஈட்டுத் தொகையை வழங்க முடியாது என்று எல். ஐ. சி. கண்டிப்புடன் மறுத்து விட்டதுதான் காரணம்! பணம் எப்போது வரும்? 'யாருக்குத் தெரியும்?' என்றார் விஷயத்தைச் சொன்ன எல். ஐ. சி. அதிகாரி.

டெயில் பீஸ்: விழா எனில், முன்பெல்லாம், கட்சிக்காரர்கள்தான் லாரி ஏற்பாடு செய்து, ஆட்கள் திரட்டி வருவார்கள். இப்போது, ஆள் திரட்டும் பணியையும் அரசு அதிகாரிகளே செய்ய வேண்டியிருக்கிறது என்று அங்கலாய்த்தார் ஒரு வருவாய்த்துறை அதிகாரி.

— ஜூலி.

வர். ஊழல் குற்றச்சாட்டு அவரை அணுகக் கூட முடியாது. உட்பூசல்கள் எல்லாம் மெல்ல மறைந்து போகும். தனிப்பட்ட ஆட்களின் தகுதியைப் பார்த்து வோட்டுப் போடுங்கள் என்று நான் எப்பவும் சொல்வேன்.

கேள்வி: மாநில அரசியலுக்கு வருவோம். உங்கள் ஜனதா தளம் ஆட்சிக்கு வந்தால் பஞ்சாப் பிரச்னையைத் தீர்க்க முடியும் என்று நினைக்கிறீர்களா? பயங்கரவாதத்தைக் கட்டுப்படுத்த முடியும் என்று நினைக்கிறீர்களா?

மேனகா: கண்டிப்பாக. அரசு மிகைப்படுத்தும் பயங்கரவாதம் எவ்வளவு, உண்மையில் இருக்கும் பயங்கரவாதம் எவ்வளவு என்று எனக்குத் தெரியாது. இப்போது பயங்கரவாதத்தை அரசேதான் தூண்டி விடுகிறது. பயங்கரவாத அணுகு முறையினாலேயே பயங்கரவாதம் வளர்கிறது. பஞ்சாப் பிரச்னைக்கு இப்பொழுது பொருளாதாரமோ வேறு ஏதோவுமோ காரணமில்லை. அங்கு ஜனங்களுக்கு பிரதமரின் மேல் நம்பிக்கை போய் விட்டது. சொன்ன வாக்கைக் காப்பாற்றாதவர் என்று புரிந்து விட்டது. லோங்கோவால் உடன்படிக்கை ஏற்பட்ட ஆறு மாதங்களுக்குப் பயங்கரவாதம் தலைகாட்டவில்லை. உடன்படிக்கையின் ஷரத்துக்கள் நிறைவேற்றப்படவில்லை என்ற நிலை ஏற்பட்ட பிறகுதான் மறுபடியும் ஆரம்பித்து விட்டது. நிலைமை அப்படியே இருப்பது காங்கிரஸுக்கு லாபம். சீக்கிய 'Bogey'யை உபயோகித்து வோட்டுப் பிடிக்கலாம். ஒரு போதும் எங்களுக்கும் பஞ்சாபுக்கும் கருத்து விரோதம் ஏற்பட்டதில்லை. ஆட்சி மாற்றம் ஏற்பட்டால் பஞ்சாப் பிரச்னை வெகு இயல்பாகத் தீர்க்கப்பட்டு விடும் என்று நான் நம்புகிறேன்.

கேள்வி: இந்த ஆண்டின் துவக்கத்தில் நடந்த தமிழ் நாடு தேர்தல் முடிவைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? காங்கிரஸ் தோல்வி உங்களுக்கு வியப்பை அளித்ததா?

மேனகா: இல்லை. ராஜீவ் காந்தி அங்கு செய்த தேர்தல் பிரசாரங்களைக் கேள்விப்பட்டதுமே காங்கிரஸ் தோற்று விடும் என்று புரிந்து விட்டது. (சிரிக்கிறார்) திராவிடர்களைப் பற்றிய கிண்டலும் 'கறுப்புக் கண்ணாடி, கறுப்பு இதயம்' என்ற பேச்சும் ஜூன் ஸ்கூல் சிறு பிள்ளைத்தனம் போல் இருந்தது. தங்கள் மாநிலத்திற்கு வந்து பேசப்படும் இந்தக் கிண்டலை அந்த மாநில மக்கள் எப்படி வரவேற்பார்கள்? அதோடு இன்னொரு பெரிய தவறு — மாநில அரசுத் தேர்தலில் மாநிலத் தலைவர்கள் தாம் மோத வேண்டும். தமிழகத்திலோ ராஜீவுக்கும் கருணாநிதிக்கும் நடந்த மோதலாகப் போய் விட்டது! தோல்விக்கு நான் மூப்பனாரைக் குறைகூற மாட்டேன். அவர் மாநிலத் தலைவராக உருவாகவே காங்கிரஸ் கட்சி விடவில்லை. வங்காளத்தில் முன்பு இதே தவறைச் செய்துதான் காங்கிரஸ் தோல்வி கண்டது. அதிலிருந்து பாடம் கற்றிருக்க வேண்டாமா? கற்கவில்லை!

கேள்வி: ஸ்ரீலங்காவில் தற்சமயம் நமக்கு உருவாகியிருக்கும் இக்கட்டிற்கு என்ன சொல்கிறீர்கள்?

மேனகா: இக்கட்டை நாமே கேட்டு வாங்கிக் கொண்டிருக்கிறோம். நமது படையை பிரேமதாஸா உபயோகித்துக் கொண்டு தமது தோல்விகளை மறைக்கப் பார்க்கிறார். அங்கு ஏற்பட்டுப் போன தலைகீழான அரசியல் சூழலில் நாம் மாட்டிக் கொள்வது சரியில்லை.

கேள்வி: 'பஞ்சாயத் ராஜ்' திட்டத்தைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

மேனகா: அது மிக நல்ல திட்டம் என்பதைப் பற்றிச் சந்தேகமில்லை. ஆனால்

அது செயல்படுத்தப்படும் முறைதான் கேள்விக்குரியது. முதலாவது இந்த யோசனையே தேர்தலை மனத்தில் கொண்டு உருவானது என்பதால் 'மக்கள் நலம்' என்னும் லட்சியம் முக்கியமற்றதாகப் போய் விட்டது. இதனால் பழைய ஜமீன்தார் காலம் போல்-கிராமங்களில் ஓர் ஆளும் வர்க்கம் உருவாகும்!

கேள்வி: வரும் தேர்தலில் உங்கள் கட்சிக்கும் காங்கிரஸ் கட்சிக்கும் எப்படிப்பட்ட வரவேற்பு இருக்கும் என்று நினைக்கிறீர்கள்?

மேனகா: இரண்டு கட்சியுமே தோல்வி அடையும் வழிகளையே கடைப்பிடித்துக் கொண்டிருக்கின்றன! (சிரிக்கிறார்). ஆனால் எங்கள் கட்சியில் இன்னும் ஒற்றுமை நிலவினால் நாங்கள் ஜெயிப்போம் என்று நம்புகிறேன். மக்கள் எங்களைக் கேட்கும் ஒரே கேள்வி — நீங்கள் எப்பொழுது ஒற்றுமையாக இருப்பீர்கள் என்பதுதான்!

கேள்வி: கட்சியில் ஒற்றுமையில்லாவிட்டால் எந்தக் கொள்கையினாலும் லாபமில்லை!

மேனகா: ஒற்றுமை வந்து விடும்! (சிரிக்கிறார்).

கேள்வி: வாழ்க்கையில் உங்களுக்கு எது அதிக முக்கியத்துவம் வாய்ந்தது?

மேனகா: வாழ்வே முக்கியத்துவம் வாய்ந்ததுதான்! அதற்கு அவசியமானது சுற்றுப்புறம். சுவாசிப்பதற்குச் சுத்தமான காற்றைக் கொடுக்காமல் உங்களுக்குக் கல்வியைக் கொடுத்துப் பிரயோசனமில்லை. இயற்கையை, சுற்றுப்புறத்தைப் பாதுகாக்க வேண்டியது மிக முக்கியமான விஷயங்களாக நான் கருதுகிறேன். பிராணிகள் விஷயத்தில் நான் ஒரு ஜீவகாருண்ய இயக்கம் ஆரம்பித்திருக்கிறேன். அதிலும் மிகத் தீவிரமாக இருக்கிறேன். சில நாட்களுக்கு முன்பு அஹமதாபாத் போயிருந்தேன். ஏர்—போர்ட்டிலிருந்து விடுதிக்குச் செல்லும் வழியில் கால் முறிந்து படுத்துக் கிடந்த ஓர் ஒட்டகத்தைப் பார்த்தேன். அதற்குச் சிகிச்சை அளிக்க வேண்டும் என்று யாரும் நினைக்கவில்லை! நான் போய் இறங்கியதுமே பல பேருக்குப் போன் செய்து ரகளை செய்து விட்டேன். ஒட்டகத்துக்கு உடனடியாகச் சிகிச்சை கிடைக்கவில்லையென்றால் கூட்டத்துக்கு வர மாட்டேன் என்றேன். உடனே அலறிக் கொண்டு ஒட்டகத்தைக் கவனிக்க எல்லாரும் பறந்தார்கள்! வங்காளத்தில் நாய்களை மலேசியாவுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள் என்று கேள்விப்பட்டேன். நான் ஜோதி பாசுவுக்கு ஒரு கடிதம் எழுதினேன், 'தயவு செய்து நாய்களை ஏற்றுமதி செய்யாதீர்கள்' என்று. 'சரி இனிமேல் செய்யவில்லை' என்று உடனே அவர் எழுதினார். தன்னலமில்லாமல் மற்றவருக்காகக் கேட்கும் உதவியை யாரும் மறுப்பதில்லை.

கேள்வி: வரும் தேர்தலில் போட்டியிடப் போகிறீர்களா?

மேனகா: ஆமாம்.

கேள்வி: அமேதியிலிருந்தா?

மேனகா: ஓ. இல்லை! (சிரிக்கிறார்). அதை நான் இப்பொழுது சொல்ல மாட்டேன்.

பேட்டி: வாஸந்தி

அட்டை வண்ணப்படமும், படங்களும்:
வி. எஸ். ராமநாதன்

---

அடுத்த இதழில்...

## விளக்கு பூஜை —சில திருப்புச் செய்திகள்.







# இந்த போலீஸ் ஸ்டேஷனுக்கு விஜயம் செய்யுங்கள்!



சிவப்பு பெயிண்ட் பூசப்படாத ஒரு காவல் நிலையம். உள்ளே நுழைந்த நம்மைக் கனிவான புன்னகையுடன் வரவேற்பது ரிசப்ஷன் பணியிலுள்ள போலீஸ்காரர். இங்கே, பழைய பிரிட்டிஷ் முறையில் ஏற்படுத்தப் பட்ட 'பாரா' முறை கிடையாது. அவரது கையில் பாரமான துப்பாக்கியும் கிடையாது. இண்டர்காம் வசதியுடன், அன்றைய செய்தித்தாள்களுடன் கூடிய ரிசப்ஷன் கவுண்டரைக் கண்டவுடனேயே இது காவல் நிலையம்தானா? என்ற சந்தேகம் ஏற்படு கிறது. ரிசப்ஷன் டூட்டியில் உள்ளவரின் காக்கிச் சட்டையும், அவரது இடுப்பில் தொங் கும் ரிவால்வரும்தான் நமது சந்தேகத்தை மாற்றும் அம்சங்கள். நம்மிடம், "உங்க ளுக்கு என்ன வேண்டும்?" என்று விசாரித் தவரிடம் "சப்–இன்ஸ்பெக்டரைப் பார்க்க வேண்டும்" என்று கூறத் "தயவு செய்து உட்காருங்கள்!" என்று கூறுகிறார்.

நாம் வரவேற்பறையில் உட்கார்ந்திருந்த போது, ஒரு கேஸ் கொடுப்பதற்காக மூன்று பேர் நிலையத்திற்குள் நுழைகின்றனர். அந்த மூவரையும் எதிர்கொண்ட தலைமைக் காவலர் அவர்களை வரவேற்கிறார். அதில் ஒருவருக்குத் தலையில் காயம். மருந்து பூசி இருந்தார். "என்ன இது காயம்? என்ன மருந்து போட்டிருக்கிங்க? வலி கூடுதலாக இருக்குமே? தனி போட்டுக் கொண்டீர் களா?" என்று நெருங்கிய நண்பர்களை வாஞ்சையோடு விசாரிப்பது போல விசாரித் தார்.

பிறகு அவர் தமது முகத்தைச் சுளித்தார். அருகே இருந்த நம்மைப் பார்த்து "ஏதோ, சாராய வாடை அடிக்குதில்லே?" என்று கேட்டுவிட்டு அந்த மூன்று பேரையும் கடைக் கண்களால் பார்த்தார். மூவரில் ஒருவரின் தலை குனிந்தது. குடித்திருப்பது யாரென நமக்குப் புரிந்தது. அடுத்து இந்தப் போலீஸ் காரரின் அணுகுமுறை என்னவாக இருக் கும்? நமக்குள் ஓர் எதிர்பார்ப்பு.

"ஓ. கே. இப்போ உங்களில் யார் குடித் திருப்பது என்று நான் டெஸ்ட் பண்ணப் போவதில்லை. ஆனால் ஒரு விஷயத்தை மனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். இது போலீஸ் ஸ்டேஷன். இங்கே வரும் போது குடித்துவிட்டு வரலாமா? நீதி கேட்டு வரும் நீங்களே இதுபோல் நிலை தடுமாறி வரலாமா? சரி, யாரு கூடச் சண்டை? காயம் எப்படி வந்தது?" என்று அவர் சாதாரண மாகக் கேஸ் விஷயத்தைத் தொடர்ந்தார்.

"தயவு செய்து உட்காருங்கள். உங்களுக் காக நான் என்ன செய்ய வேண்டும்?" என்று சப் – இன்ஸ்பெக்டர் அன்போடு நம்மைக் கேட்டார். "உங்களது மாடல் போலீஸ் ஸ்டேஷனைப் பற்றிக் கேள்விப் பட்டோம். நேரில் பார்த்துவிட்டு எழுத விருப்பம்!" என்று கூறினோம்.

தம் பெயர் ஜசக் என்று அறிமுகம் செய்து கொண்டு, பேசினார் அவர்.

"பொதுமக்கள் – போலீஸ் தொடர்பு

என்பது ஒழுக்கமுள்ளதாய், எளிதானதாய், நீதி உள்ளதாய் இருக்க வேண்டும் என்பதே இந்த மாடல் நிலையத்தின் அஸ்திவாரக் கற்கள். இதனை வலுப்படுத்துவதற்காக இங்கு பணிபுரியும் காவலர்களுக்குப் பொது ஜனத் தொடர்பு சம்பந்தமாகக் கொச்சி சர்வகலா சாலையில் ஸ்கூல் ஆஃப் மானேஜ்மெண்ட் துறையின் ரீடரும் இயக்குனருமான பேராசிரியர் அலெக்ஸ் பி. லூகோஸ் அவ்வப்போது முறைப்படி வகுப்புக்கள் நடத்துகிறார். இந்த நிலையம் கடந்த மார்ச் 17—ஆம் தேதி முதல் செயல்படத் துவங்கியது...''

''பலதரப்பட்ட குற்றவாளிகளைக் கையாளும் சூழ்நிலையில் இதுபோன்ற புதிய அணுகு முறை எப்படி சாத்தியமாகும்?'' என்ற கேள்விக்கு, ''ஓர் ஊரில் உள்ள எல்லோருமே ரவுடிகளாக இருப்பதில்லையே. ஏதோ ஒரு சிலர் இருக்கலாம். அதற்காகப் பொதுமக்கள் அனைவரையும் ரவுடிகளாகப் பார்ப்பது சரியானதல்ல என்பதே எங்களின் கொள்கை'' என்றார் எஸ். ஐ.

சுற்றிப் பார்த்தோம். சுத்தமான திரைத் துணியால் முகப்பு மறைக்கப்பட்ட 'செல்' அதாவது ஜெயில். (அதன் தூய்மையைப் பார்க்கும் போது நாம் கூடக் கொஞ்ச நேரம் 'உள்ளே' இருந்து விட்டு வரத் தோன்றுகிறது.) இன்ஸ்பெக்டர் அறை, தலைமைக் காவலரின் அறை, காவலர்கள் ஓய்வறை எல்லாவற்றிலும் ஒரு வீட்டைப் போன்ற தூய்மையின் புத்துணர்வு! காவல் நிலையத்தின் தோற்றமே ஒரு பூங்கா போல் இருக்கிறது!

இந்தக் காவல் நிலையத்தைப் பார்வையிட்ட கேரள மாநில முதல்வர் நாயனார் தமது பாராட்டுதல்களைத் தெரிவித்ததோடு, காலப் போக்கில் மற்றகாவல்நிலையங்களையும் இதுபோலவே மாற்றலாம் என்று தெரிவித்துள்ளார்.

இங்குபணிபுரியும்அதிகாரிகள் ஒவ்வொரு வருடமும் தங்களது ஒருநாள் ஊதியத்தை முதலமைச்சர் நிதிக்காகக் கொடுத்து விடுவார்களாம்.

''எல்லாம் சரி, இந்த அற்புதம் எங்கே?'' என்று கேட்கத் தோன்றுகிறதா? எர்ணாகுளம் — ஆல்வாய் தேசிய நெடுஞ்சாலையில், எர்ணாகுளத்திலிருந்து பத்து கி. மீ. தொலைவிலுள்ள கலமசேரி என்னுமிடத்தில் அமைக்கப்பட்டுள்ளதுதான் இந்த மாடல் காவல் நிலையம். எர்ணாகுளத்திற்குச் சுற்றுலாச் செல்பவர்கள் இனிமேல், தாங்கள் காண வேண்டிய இடங்கள் வரிசையில் கலமசேரி மாடல் போலீஸ் ஸ்டேஷனையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்!

— போடி சிவாஜி

படம்: ரமேஷ்



''மானேஜருக்கும் லேடி டைப்பிஸ்ட்டுக்கும் கல்யாணம் முடிஞ்சிட்டதுன்னு எப்படிச் சொல்றே?''

''அவ ஆபீஸுக்குள் நுழைந்ததும் மானேஜர் எழுந்து நிற்கிறாரே...!''

— இடையகோட்டை ஆசாத்.



''இவங்களோட கட்சி வித்தியாசமான கட்சி.''

''எப்படி?''

'''வெள்ளைக்காரன் ஆட்சியை மீண்டும் கொண்டு வரப் போகிறோம்'னு சொல்லி வோட்டுக் கேட்கிறாங்க!''

— ஆம்பூர். பத்மநாபன்.

டி. எஸ். பி.: உங்க பகுதியிலே மட்டும் கள்ளச் சாராயம் காய்ச்சறதை ஒழிக்க முடியாதுன்னு சொல்றீங்களே, ஏன்?

இன்ஸ்பெக்டர்: மாசா மாசம் மாமூலைக் கரெக்டாக் கொண்டு வந்து கொடுக்கிறவங்க மேலே ஆக்ஷன் எடுக்கறதுக்கு மனச்சாட்சி இடம் கொடுக்க மறுக்குது சார்!

— என். கந்தசாமி.




சிங்கள பயங்கரவாதிகள்
பிரேமதாச
பேச்சு வார்த்தைகள்


அவன் போனா போகட்டும். நம்ம கட்சி கட்டுக் கோப்பா வெச்சிருக்கோம்!
ராவ்
பூடாசிங்
ஆசை வார்த்தைகள் அச்சுறுத்தல்
ராஜினாமா


முட்டை கொடுக்கறது ஜூன் மாசம்னா, பாட புஸ்தகம் கொடுக்கறது எந்த மாசம்? ..ம்.. சொல்லுங்க..
மூப்பனார்




கல்கி

1989 ஆகஸ்ட் 13
மலர் 48 இதழ் 2
சுக்ல ஆடி 29




## வீரேந்திர சிங்கின் தீரம்!

சென்ற இதழ் தலையங்கத்தின் இறுதியில், ''எதிர்க்கட்சி எம். பிக்களின் ராஜினாமா ராஜீவ் அரசுக்கு ஒரு சவாலாக விளங்க வேண்டுமானால் அவர்களுடன் சேர்ந்து மனச்சாட்சிக்கு மதிப்பளிக்கும் சில ஆளும் கட்சி எம். பிக்களும் ராஜினாமாச் செய்தால்தான் உண்டு'' என்று எழுதியிருந்தோம். ஆளும் கட்சியைச் சேர்ந்த சிலபலர் ராஜினாமாச் செய்யாவிட்டாலும் ஒரே ஓர் எம். பி. யாவது மனச்சாட்சிக்கு மதிப்பளித்து, அச்சமின்றியும் பணத்தாசை, பதவி ஆசைக்கு அடிமைப்படாமலும் ராஜினாமாச் செய்ததில் மகிழ்ச்சி அடைகிறோம். எதிர்க்கட்சி எம். பிக்கள் அத்தனை பேருடைய ராஜினாமாவையும் விட மேலானது, முக்கியமானது ராவ் வீரேந்திர சிங்கின் ராஜினாமா.

வீரேந்திர சிங்கின் ராஜினாமா ஆளும் கட்சியை ஒரு கலக்குக் கலக்கியிருக்கிறது என்பது உண்மை. வெளிப்படையாகக் காண்பித்துக் கொள்ளாவிட்டாலும் உள்ளூர ஓர் அச்சம் ஏற்பட்டிருக்கிறது. காங்கிரஸ் எம். பிக்கள் திடீரென்று கே. என். சிங்கின் நோக்கில், ''மதிப்பு மிக்கவர்''களாகியுள்ளனர். அவர்களை அவசரமாக அழைத்துப் பேசவேண்டிய நிர்ப்பந்தம் கே. என். சிங்குக்கும், பூட்டாசிங்குக்கும் ஏற்பட்டிருக்கிறது. புகழ்ச்சி வார்த்தைகள் தவிர, பசப்பு மொழிகளும் ஆசை காட்டும் சொற்களும் பேசப்பட்டிருக்கும் என்பதில் ஐயமில்லை.

ஜனநாயகம் என்பது பெரும்பான்மைக் கட்சியின் ஆட்சி என்பது உண்மைதான். எனினும் அதுமட்டுமல்ல. சட்டத்தின் ஆட்சி என்றாலும் அது மட்டுமேயல்ல. ஜனநாயகம் இவற்றுக்கு மேம்பட்டது. நல்ல மரபுகளைப் பின்பற்றுவது, மனச்சாட்சிக்குப் பயந்து நடந்து கொள்வது, எதிர்க்கட்சியினரின் சொல்லுக்கு மதிப்பளிப்பது; சிறுபான்மையினரின் நலனைக் காப்பது, சத்தியம் — தர்மம் இவற்றின் அடிப்படையில் செயலாற்றுவது, நீதி நிலைக்கப் பாடுபடுவது முதலிய எல்லாவற்றையும் உள்ளடக்கியதே ஜனநாயகம். இதைப் புரிந்து கொள்ளாமல் நடந்து கொள்ளும் தலைவர், சர்வாதிகாரி என்று அழைக்கப்படா விட்டாலும் அவ்வாறுதான் அவர் கட்சியினருக்கே கூடத் தோற்றமளிப்பார் — அதாவது மனச்சாட்சியை விற்றுவிடாமல் அதற்கு மதிப்பளிக்கும் அவருடைய கட்சியினருக்கு. வீரேந்திர சிங்கின் ராஜினாமாக் கடிதம் இதனைத் தெளிவுபடுத்துகிறது. அவர் கூறுகிறார்:

''காங்கிரஸில் நான் மூச்சுத் திணறுவது போல் உணர்ந்தேன். கட்சி மாறல் தடுப்புச் சட்டம் என்னை மனம் திறந்து பேச முடியாமல் செய்து வந்திருக்கிறது. பஞ்சாப் பிரச்னையிலும், ஸ்ரீலங்கா பிரச்னையிலும் அரசு நடந்து கொண்ட விதம் நற்பலன் அளிக்கவில்லை என்றாலும், நல்ல நோக்கத்துடன் அரசு செயல்பட்டிருப்பதாகக் கருதலாம். ஆனால் போஃபோர்ஸ் விஷயத்தை இப்படி எண்ணுவதற்கில்லை. இடைத்தரகர்களுக்குத் தரப்பட்டுள்ள கமிஷன் யார் யாருக்குப் போயிற்று என்று கண்டறியப்பட வேண்டும். மக்களுக்கு உரிய அந்தப் பணத்தைத் திரும்பப் பெற முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும். பிரதம கணக்குத் தணிக்கை அதிகாரியின் (ஸி. ஏ. ஜி.) அறிக்கை விஷயத்தில் ஆளும் கட்சி நடந்து கொண்டிருக்கும் விதம் நிலைமையை மேலும் மோசமாக்குகிறது. ஸி. ஏ. ஜி. யின் நேர்மையை நாம் சந்தேகிக்க ஆரம்பித்தால் நமது நேர்மையை மக்கள் சந்தேகிக்கவே செய்வார்கள். பஞ்சாயத்து ராஜ் மசோதாவைச் சட்டமாக்க இத்தனை அவசரப்படும் அரசு, மண்டல் கமிஷன் அறிக்கை மீது எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. காங்கிரஸில் உட்கட்சி ஜனநாயகம் இல்லை. கருத்துச் சுதந்திரமும் இல்லை. எல்லாரும் தலையாட்டிப் பொம்மைகளாகி விட்டோம். இதையெல்லாம் இன்றுவரை வெளிப்படையாகப் பேசாவிட்டாலும் பிரதமருக்குக் கடிதங்கள் மூலம் உணர்த்தியிருக்கிறேன். நேரில் சந்திக்கவும் முயன்றேன்; முடியவில்லை!''

வீரேந்திர சிங் ஹரியானாவில் மிகப் பிரபலமான தலைவர். அங்கு முதலமைச்சராகவும் பிறகு மத்திய விவசாயத்துறை அமைச்சராகவும் இருந்தவர். நாளை இவர் எதிர்க்கட்சிகளுடன் இணைவாரோ என்னவோ, இன்று எதிர்க்கட்சிகளிடமும் தமக்குப் பிரமாதமான மதிப்பு ஏதும் இல்லை என்று உணர்த்தியிருக்கிறார். ஆனால் ஜனநாயக மரபுகளையும் ஒழுக்கங்களையும் நிலை நிறுத்துவதில் எதிர்க்கட்சிகளைவிட, ஆளும் கட்சிக்கே அதிகப் பொறுப்பு உண்டு என்பதைச் சுட்டிக்காட்டியிருக்கிறார்.

வீரேந்திர சிங்கின் தீரத்துக்குத் தலைவணங்கி அவரை வாழ்த்துகிறோம்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.





**கோ-ஆப்டெக்ஸ்**

# இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் திரட்டப்பட்ட இணையற்ற-எழில்மிகுந்த பட்டுச் சேலைகள்!

எங்களது பிரத்தியேக பட்டு விற்பனை நிலையங்கள்

**தில்லையாடி வள்ளியம்மை**

**பட்டு மாளிகை**

350, பாந்தியன் சாலை, எழும்பூர்,
சென்னை-600 008. போன்: 860775

**தாமரை**

கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை,
314-315, ராஜ வீதி,
கோயம்புத்தூர்-641 001.

**பவளம்**

கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை,
365, நேதாஜி சாலை,
பெரியார் மன்றம், ஈரோடு-638 001.

**கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை**

57, தேர் நிலையம்,
சேலம்-636 001. போன்: 64651

**அமுதசுரபி**

கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை,
12 & 14, தேரடி கடை வீதி,
திருச்சி-620 002. போன்: 25034

**ரேஷ்மதாரா**

கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை,
சபீனா பிளாஸா (முதல் அடுக்கு)
84, 85, இன்பேன்டரி சாலை,
பெங்களூர்-560 001.

**குஷ்பூ**

கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை,
16 & 17, புது மார்க்கெட், திலக் சாலை,
அபிட்ஸ், ஹைதராபாத்-500 001.

DIPR/1329/MS/89/ELEGANT







### வில்லனான வீடியோ

○○ திருமணத்திற்கு முன்பே, எங்கள் சித்தப்பா மகன் தனது ஹனிமூனுக்காகத் தன் அப்பாவிடம் மூவாயிரம் ரூபாய் வாங்கி விட்டார். கொஞ்சம் 'தாராளச் செலவு'க் காரர் என்பதால் தனது ஆபீஸ் நண்பர் களோடு அதைச் செலவும் செய்து விட்டார். மறுபடியும் எப்படி தேனிலவுக்கென்று அப்பாவிடம் கேட்பது? எனவே, திருமண நாளன்று வருகிற மொய்ப் பணத்தில் கணிச மான அளவுக்கு அப்பாவுக்குத் தெரியாமல் தனியாக 'வெட்டி'ச் சமாளித்துக் கொள்ளத் திட்டம் போட்டு, அதன்படியே அவரும் அவரது நண்பர்களும் பணத்தோடு கூடிய சில மொய்க் கவர்களைத் தனியாகப் பத்திரப்படுத்திக் கொண்டு விட்டனர். திருமண கோலாகலத்தில் இதை யாரும் கவனிக்கவில்லை. திருமண ஆரவாரம் அடங்கிய பிறகு அப்போது எடுக்கப்பட்ட வீடியோவைப் போட்டுப் பார்த்தோம். அப் போது மாப்பிள்ளை கோஷ்டி தனியாகச் சில கவர்களை ஒதுக்கியதெல்லாம் வீடியோ வில் பளிச்சென்று தெரிந்தது. பிறகு வேறு வழி! மாப்பிள்ளை தனது தவறை ஒப்புக் கொண்டு பணத்தைத் திருப்பி அப்பா விடமே கொடுத்து விட்டார்! இத்தனைக் கும் வீடியோ வேண்டாம் என்று பெற்றோர் சொன்ன போது, அவசியம் வேண்டு மென்று ஒற்றைக் காலில் நின்றது மாப் பிள்ளைதான்!

— கே. சுவாமிநாதன், சென்னை — 83.




### கலர் டி. வி. யும், கலர் பல்புகளும்...

○○ பக்கத்து கிராமத்தில் உள்ள பள்ளிக் கூட தலைமை ஆசிரியர் ஒருவர் எங்கள் டி.வி. கடைக்கு வந்தார். கறுப்பு — வெள்ளை டி.வி., கலர் டி.வி. பற்றியெல்லாம் விசாரித் தார். விலைகளைக் கேட்டார். 'கலர் டி.வி.க்கு ஏன் அவ்வளவு அதிக விலை?' என்று கேட்டார். காரணங்களை விளக்கிச் சொன்னேன். என்ன நினைத்துக் கொண் டாரோ, கலர் டி.வி.யின் பின்புற மூடியைத் திறந்து காண்பிக்கச் சொன்னார். மெக் கானிக்கை அழைத்துத் திறந்து காண்பிக்கச் சொன்னேன். உள்ளே எதையோ உற்று நோக்கிக் கொண்டிருந்தார். "உள்ளே என்ன பார்க்கிறீர்கள்?" என்றேன். "கலர் டி.வி.யாச்சே! உள்ளே எந்த எந்த இடங் களில் எத்தனை எத்தனை கலர் பல்பு




கள் மாட்டியிருக்கிறீர்கள் என்று பார்க்கிறேன்!'' என்றார்.

நான் மூர்ச்சை போட்டு விழாத குறைதான்!

— எம். பி. துரைஸ்வாமி, மதுரை — 6.

**பரிசுகளைத் திரும்பத் தரும் விதம்!**

●● என் தம்பியின் திருமண வரவேற்பு நிகழ்ச்சியைக் குடும்பத்தினர் அனைவரும் பார்த்துக் கொண்டிருந்தோம். ஏராளமான பரிசுப் பொருட்களை தம்பி பெற்றுக் கொண்டிருப்பதைத் திரையில் பார்த்த என் அம்மா, ''இவையெல்லாம் வட்டியில்லாக் கடன்தான். திருப்பி ஒவ்வொருவருக்கும் நீ பிரசென்ட் பண்ண வேண்டும்,'' என்று சொல்ல, ''அதற்கென்ன பண்ணி விட்டால் போச்சு!'' என்று சொன்ன தம்பி, ரிமோட் கண்ட்ரோலில் ரீவைன்ட் செய்ய, பிறகென்ன? வாங்கின பரிசுப் பொருட்களையெல்லாம் தம்பியும், தம்பி மனைவியும் திருப்பி வேக வேகமாகக் கொடுக்க, பரிசளித்தவர்களெல்லாம் பரிசினைத் திரும்ப பெற்றுக் கொண்டு வந்த வழியே ஓடியதைப் பார்த்து அம்மா உட்பட அனைவரும் சிரியோ சிரியென்று சிரித்தோம்!

— உஷா அசோக்குமார், காஞ்சீபுரம்.

**கணவன் சொற்படி கேட்கும் மனைவி!**

●● என் நண்பர் ஒருநாள் என்னைச் சந்தித்த போது, ''என் மனைவி, சில நாட்களில் மட்டும், இரவில் ஐந்து அல்லது பத்து நிமிஷம் நான் சொல்வதைக் கேட்பாள்!'' என்றார்.

''பரவாயில்லையே! அது எப்படி?'' என்று நான் கேட்டேன்.

''அப்பொழுது நான் டீ.வி.யில் தமிழ்ச் செய்தி வாசிப்பதை!'' என்றார் என் நண்பர்.

— பி. வி. ஸ்ரீனிவாசன், சென்னை—28.

**உப்பு எப்போது வரும்?**

●● சனிக்கிழமை இரவு வீட்டில் நாங்கள் எல்லோருமாக டீ.வி. பார்த்துக் கொண்டே ஒரே பேச்சும் அரட்டையுமாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். நடுவில் சாப்பிட்டவர்களில் ஒருவர், ''எனக்கு உப்புக் கொஞ்சம் வேண்டும்'' என்றதும், சமையலறையிலிருந்து அம்மா உப்பை எடுத்து வரச் சென்றார். ஆனால் வேறு ஏதோ செய்யப் போனதில் அவர் மறந்து விட்டார். கேட்டவர் இன்னும் உப்பு வரவில்லையே என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்த சமயம், டீ.வி.யில் மறு தினம் பகல் 1.30 மணிக்கு 'உப்பு' என்ற மலையாளப் படம் காட்டப்படும் என்று அறிவிப்பாளர் சொல்லிக் கொண்டிருந்தார். டீ.வி. திரையில் ''உப்பு'' என்று படித்ததும் நாங்கள், ''ஓஹோ உப்பு நாளை பகல் தான் வரும் போலிருக்கிறது'' என்று சொல்லிச் சிரிக்க ஆரம்பித்து விட்டோம்!

— ஹரிணி, குவாலியர்.

**மகனின் மீசையும் அப்பாவின் பூசையும்!**

●● சிறுவர்கள் பங்கு பெற்ற மாறு வேட நிகழ்ச்சி நடைபெற்றது. அதை என் நண்பர் வீட்டு டீ.வி.யில் பார்த்துக் கொண்டிருந்தேன். அதில் வீரபாண்டிய கட்டபொம்மனாக ஒரு சிறுவன் நடித்தான். அவனுடைய நடிப்பு மிகவும் நன்றாக இருந்தது. நானும், என் நண்பரும் அந்தச் சிறுவனைப் புகழ்ந்தோம். அதற்கு என் நண்பரின் மனைவி, ''அந்தச் சிறுவன் நன்றாக நடிக்கிறான்; இங்கு உள்ளவனால் சாப்பிடத்தான் முடியும்'' என்று தம் பத்து வயது மகனைக் குறை கூறினார். என் நண்பரின் மகனுக்குக் கோபம் வந்து விட்டது. அவன் உடனே எழுந்து, ''டீ.வி.யைப் போட்டு உடைக்க வேண்டும் என்று துடிக்கிறது மீசை. அடக்கு, அடக்கு என்கிறது அப்பாவின் பூசை!'' என்று நடிப்போடு கூறியதும், எங்கள் சிரிப்பைக் கட்டுப்படுத்தவே முடியவில்லை.

— தா. சீனுவாசன், அச்சரப்பாக்கம்.

●● புகழ்ச்சி, பூவைப் போன்றது. அதன் வாசனையை நுகரலாம். ஆனால் அதை அப்படியே விழுங்கி விடக்கூடாது!

— மிஸ். ஸ்பெக்டேட்டர்.

தகவல்: திருமதி புனிதவல்லி இளங்கோ.

# அவளுக்கு எல்லாம் தெரியும்..!












# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

ஆகவே நானும் விவேகானந்தா கல்வி நிலையத்தில் ஆங்கிலம் கற்க விரும்புகிறேன். எனவே, இப்பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும் விண்ணப்ப படிவத்தையும் கீழ்கண்ட எனது முகவரிக்கு உடனே அனுப்பவும்

முகவரி:
B சுதாகர்,
30, ஆதிமூலம் பிள்ளை சந்து
வடக்கு ஆவணி மூல வீதி
மதுரை - 625006

WRITE PIN CODE IN ADDRESS

INDIA



To
விவேகானந்தா கல்வி நிலையம்,
தபால் பெட்டி எண் 4986
No.9, மோட்லி ரோடு
தி. நகர்,
சென்னை
PIN 600017

உங்களுக்கும் உங்களது முன்னேற்றத் திற்கும் இடையில் இப்பொழுது உள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டு தான் என்று நாங்கள் கூறினால் அது சற்று மிகையாகத் தோன்றும். ஆனால் உண்மை அதுதான்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேறு வதற்கு ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மை ஒரு தடை யாக இருந்திருந்தால்........

மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசும் போது அதை ஓரளவு புரிந்து கொண் டும், அதற்கு ஆங்கிலத்திலேயே பதில ளிக்க முடியவில்லையே என்ற குறை உங்களிடம் குடி கொண்டிருந்தால்,

பல புத்தகங்களைப் படித்தும் ஆங் கிலத்தில் பேச முடியவில்லையே என்ற சலிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்,

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற் றத்தை இப்பொழுது அடைய ஒரே ஒரு போஸ்ட்கார்டுபோதும்...ஆமாம்!

ஆங்கிலத்தில் இலக்கணப் பிழை யின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், தயக்க மின்றி சரளமாகப் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்று போற்றப்படும் விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு இன்றே அனுப்புங்கள்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சியைப் பற்றியும் மற்ற தகவல் களையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இந்த எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற் கொள்ளலாம்.

"நேர்முகப்பயிற்சியும் உண்டு."

என்ன?.....எங்கே கிளம்பி விட்டீர் கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கிவிட்டது.

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி

---

விவேகானந்தா கல்வி நிலையம்
9, மோட்லி ரோடு,
தி. நகர், சென்னை - 17.

NAGA

---

# இரண்டாவது சூரியன்

## சென்ற வாரம்...

இனியும் தன் கணவனோடு சேர்ந்து வாழ முடியாது என்ற சூழ்நிலையில் கோர்ட்டில் விவாகரத்துப் பெறுகிறாள் பானுமதி. தீர்ப்பு முடிந்து, கோர்ட் வாசலுக்கு வந்தாள். ''எங்கே குழந்தைகள்?'' என்று கேட்க, ''அவரிடம் பேசிக் கொண்டிருக்கின்றன....'' என்கிறார் வக்கீல்.

## 2

இந்த கோர்ட் வராந்தாவின் மறுகோடியில் மிக அற்புதமாய் ஒரு சோக நாடகம் நடந்தது.

''இனிமே இவர் எதுக்குங்க என் புள்ளைகளைத் தொடணும்? போய் இட்டாங்கப்பா.''

''சும்மா இருங்க பானுமதி. கடைசியாக் குழந்தைகளைப் பார்க்கணும்னாரு. என்னிக்கும் நீங்கதாங்க அந்தக்குழந்தைகளுக்கு அப்பா... நல்லாப் பாருங்கன்னு நான்தான் அனுப்பினேன்.''

வெள்ளை வேட்டிகள் குழந்தைகளைச் சூழ்ந்து கொண்டு நின்றன. பிள்ளை வெளியேற முயற்சி செய்தான் போலிருக்கிறது. கூட்டம் சற்றே பிளந்து கொண்டது. பையன் விரைப்பாய் நிற்பது தெரிந்தது.

அது மண்டி போட்டுக் கொண்டிருந்தது. பானுமதி கவனிக்கிறாள் என்றதும் குழந்தைகளைக் கைக்கு ஒன்றாய் அணைத்துக் கொண்டது.

''இது ஒண்ணுதான்யா என்னால தாங்க முடியலை. இதுங்களை விட்டுட்டு எப்படி உயிர் வாழப் போறேனோ தெரியலை. என் குழந்தைகளை நினைக்கிற போது சுருண்டு செத்துடலாமான்னு தோணுதுய்யா.''

''புரியுது ஐயா. உங்க மனசு நல்லாப் புரியுது. வான் புகழ் வள்ளுவர் தெரியாதயா சொல்லிருக்காரு. 'பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த மக்கட் பேறு அல்ல பிற'' — ஒரு ஜால்ரா ஜிங்கென்று தட்டியது.

''ஆனா இதற்கு இணையான பெரும்பேறு உங்க தமிழ் ஐயா. அதுக்கோசரம் நீங்கமனசைத் தேத்திக்கணும். கூட இருந்த இன்னொரு ஜால்ரா இன்னும் உரக்கத் தட்டிற்று.

''ஊழ்வினை பத்தி, ஐயா திருக்குறள் சொன்னப்ப சிலிர்த்துப் போச்சு. நீதிபதி ஐயாவுக்குப் புரியலை அது...'' மறு ஜால்ரா தன் வேலையைச் செய்தது.

''எனக்கென்னவோ அந்த ஊழ்வினைத் திருக்குறள் இந்தப் பசங்களோட அம்மாவுக்குத்தான் பொருந்தும்னு தோணுது. ஐயாவோட தமிழை அனுபவிக்க அவங்களுக்குக் கொடுப்பினையில்லை.''

''கோர்ட்ல நிறையப் பேசாதீங்கப்பா. வெளிய போயிடுவோம்!'' யாரோ தடுத்தார்கள்.

மண்டி போட்டது எழுந்து நின்றது. கண்ணாடி கழற்றிக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டது. தொண்டையைச் செருமிக் கொண்டது.

''தம்பி, நல்லாப் படிக்கணும். அப்பா இல்லையேன்னு கவலைப்படக் கூடாது. தங்கச்சிய இனிமே பொறுப்பா நீதான் பார்த்துக்கணும். எது வேணும்னாலும் அப்பாவுக்கு ஒரு போன் பண்ணு. உடனே ஓடி வந்துடுவேன். சரியா.''

பையன் பேசாதிருந்தான். கூட இருந்த ஜால்ராவுக்கு இது உறுத்தியது போலும். பிள்ளை முதுகை அதுவும் தடவிற்று.

''நாடு போற்றும் தமிழ்ப் பேராசிரியர் மகனைய்யா நீங்க.. உங்க அப்பா பேர் கெடாத நடந்துக்கணும்.''

''புலிக்குப் பிறந்தது பூனையாகுங்களா?''

''பையன் சூழ்நிலை மாறுதுங்களே. அதுக்கோசரம் சொல்றேன். ஐயா நிழல்ல நாம இருக்கோம். நம்ம மேலயும் தமிழ் வாசனை படுது. ஐயா போலாங்களா.''

அது தயாராயிற்று. பிள்ளை தலையிலும், பெண் தலையிலும் கை வைத்து வான் நோக்கிக் கை கூப்பிற்று.

''வரட்டுமா..'' முகம் முழுவதும் சோகம் தாங்கி நின்றது. மெல்லத்

## பாலகுமாரன்

தள்ளாடிற்று. நகரத் துவங்கிய பெண் குழந்தையை வாரித் தூக்கி முத்தமிட்டது. "பூங்குழலி பூங்குழலி" என்று திணறிற்று.

"ஐயா... அமைதியா இருங்க ஐயா. வெள்ளை வேட்டிகள் அவரைத் தாங்கிக் கொண்டன. குழந்தை கீழிறங்க, யார் தோளிலோ முகம் சாய்த்துக் கொண்டது.

"ஐயா, மனசு திடம் விட்டுராதீங்கய்யா. நாங்கெல்லாம் உங்க காலடியிலயே இருக்கோம். தைரியமா இருங்க."

மெல்ல நடத்திக் கூட்டி வந்தார்கள். கடந்தார்கள். கடந்தது நின்றது. திரும்பியது. தன்னுள் சின்ன நடுக்கத்தைப் பானுமதி உணர்ந்தாள்.

"நன்றி ஐயா" பானுமதி வக்கீலை நோக்கிக் கைகூப்பியது. யாரோ சூள் கொட்டினார்கள். வக்கீல் பதிலுக்குக் கைகூப்பப் படையோடு படியிறங்கியது.

அருகே வந்த குழந்தைகளைப் பானுமதி வருடிக் கொடுத்தாள். உற்று முகம் பார்த்தாள். குழந்தைகளுக்குப் புரியவில்லை. அவர்களுக்கு எல்லாமும் வியப்பாய் இருந்தன. எட்டி வெளியே பார்த்தாள். படை காரைச் சுற்றிக் கொண்டிருந்தது. ஆட்கள் கூடி நிற்பதைப் பார்த்துப் போகிறவர்கள், வருகிறவர்கள் எட்டிப் பார்த்தார்கள். எட்டிப் பார்க்கிறவர்கள் அதிகமாக, பந்தா அதிகரித்தது.

"கொஞ்சம் விலகி நில்லுங்க. பேசிக்கிட்டிருக்காங்க இல்லே..." கூட்டம் வளையமாகிற்று. காரிலிருந்து இறங்கிக் கைகூப்பி வணக்கம் சொல்லிற்று. நிமிர்ந்து ஒருமுறை அவளைப் பார்த்தது. உதடு கோணின பார்வை.

'பார்த்தியாடி கூட்டத்தை... என்னை யாருன்னுடி நினைச்சே...?'

'மிருகம்டா நீ. மனுஷனே இல்லை. மிருகம்' — பானுமதி மண்டைக்குள் ஒரு கூச்சல் ஓடிற்று. கோர்ட் வராந்தாவில் நாலு பேர் முன்பு கொஞ்சிய இதே பெண் குழந்தையை, நின்றவாக்கில் இவன் தரையில் போட்டிருக்கிறான். வீல் என்று அலறி வேட்டி பிடித்து அது எழ முயற்சி செய்யப் புறங்காலால் விலக்கியிருக்கிறான். யாராவது நம்புவார்களா? இந்த வளையம் நம்புமா?

இனி என் வீடு அமைதியாய் இருக்கும். எல்லா விடியலிலும் மெல்லிய குழல் மட்டும் கேட்கும். பயமில்லாத மனசில் பதற்றம் இருக்காது. பதற்றமில்லா வாழ்க்கையில் அயர்ச்சி இருக்காது. அயர்ச்சி கவிழ்க்கும் வெறுப்பு இருக்காது. நான் என்னை நேசிப்பேன். என் வாழ்க்கையை நேசிப்பேன். என்னைச் சுற்றியுள்ளவர்களை நேசிப்பேன்.

கடவுளே உனக்கு வந்தனம். பதினாலு வருட வனவாசம் முடிந்து போயிற்று. கடவுளை விட அப்பாவுக்கு நன்றி சொல்ல வேண்டும். இந்தத் தள்ளாத வயதில்



இத்தனை திடமாய் இவர் துணை இருந்ததே வெற்றிக்குக் காரணம்.

அப்பாவுக்கு இந்த விடுதலை வெறியும் அவர் கண்ணெதிரே அடிவாங்கி அலறிய போதுதான் ஏற்பட்டது. 'அறுத்தெறி பானுமதி. அவன் கட்டின தாலியை... பொட்ட நாயே, பொம்பளையக் கை நீட்டி அடிக்கிறியே.. வெட்கமாயில்லை உனக்கு. அறுத்தெறி பானுமதி.'

பானுமதி அப்பா ஏற்றிய வெறியில் தாலியை அறுத்தெறிந்தாள். இப்போது சட்டப்படியும் அறுத்தாயிற்று. இனி அது யாரோ, நான் யாரோ.

கார் கிளம்பிற்று. வட்டமடித்தது. வெளியேறிற்று.

''மந்திரி ஆயிடுவான்னு சொல்றாங்கம்மா.'' அப்பா கீழே கலையும் கூட்டம் பார்த்துப் பேசினார்.

''என்ன வேணா ஆகட்டும். இனி நம் மூஞ்சில முழிக்காத இருந்தாச் சரி.''

''பசங்களை நாம பாழ்படுத்திட்டோமோன்னு தோணுது பானுமதி. அதுங்களுக்கு உசந்த படிப்பு, சௌகர்யம் கிடைச்சிருக்கும்.''

''வாழ்க்கைல உசரத்துக்கும், படிப்புக்கும் சம்பந்தமில்லைப்பா. என் குழந்தைங்க நல்ல குழந்தைகளா இருக்கணும். பயமில்லாத வளைய வரணும். துக்கமில்லாத தூங்கணும். வாய்



விட்டுச் சிரிக்கணும். உள்ளே நுழையப் போதே அப்பா இருக்காங்களான்னு பயத்தோட வர்ற குழந்தை என்ன படிச்சு என்ன புண்ணியம்?''

''பேசறது சுலபம். வாழறது கஷ்டம்.''

''ஏம்பா பயப்படறீங்க?''

''பயம்தான். இனிமே எல்லா விஷயமும் பயம்தான். அடிபடாத நீ இருக்கணும்னு பண்ணிட்டேன். தவிர, உள்ளே இப்படி ஆயிடுச்சேன்னுதான் அழுவறேன்.

''என்னை மாதிரி ஆயிரம் பேர் இருக்காங்க உலகத்துல. ஒரு பயமும் இல்லை.''

''வால் அறுந்த நரி கதைதான். சிக்கி அறுந்து போனதைச் சுமைன்னு அறுத்துட்டேன்னு நரி சொல்லிச்சாம். அப்படித்தான் இருக்கு நம்ம கதையும்.''

''பானுமதியம்மா. இன்னும் பத்து நாள்ல கோர்ட் ஆர்டர் வந்துடும். நீங்க வீட்டுக்குப் போகலாம்.'' — வக்கீல் அருகே வந்தார்.

''ரொம்ப நன்றிங்க.''

''கொலை பண்ணித் தண்டனைலேர்ந்து வக்கீல் தப்பிக்க வச்சாப் பார்ட்டியும் நன்றி சொல்லலாம். வக்கீலும் வாங்கி வச்சுக்கலாம். உங்களுக்கு நான் தண்டனை வாங்கிக் கொடுத்தேனான்னே எனக்குத் தெரியலை. உங்க நன்றியை நான் எப்படி எடுத்துக்கறது?''

''ஏன் சார். எல்லா ஆம்பளையும் ஒரே மாதிரி யோசிக்கறீங்க.''

''புரியலை.''

''நான் ஹிம்சைப்பட்டுப் புருஷனோட இருந்தா உசத்தி. தைரியத்தோட பிரிய நினைச்சாப் பாவம். என்னவோ என்னைச் சாக்கடைல தள்ளிட்ட மாதிரி இல்ல அலுத்துக்கறீங்க. பொம்பளை தனியா நிக்கக் கூடாது. நின்னா பொறுக்காது.''

''கோவமாயிட்டீங்க.''

''இல்லீங்க. வெறுப்பு வருது. உங்க இரக்கம் பாத்து ஆத்திரம் வருது.''

''நீங்க பிரிஞ்சதுக்கு வருத்தப்படலை. அது உங்க முடிவு. ஆனா பிரிஞ்ச பிறகு இனி கடைசி காலம் வரைக்கும் நீங்க தனியா நிக்க முடியுமான்னு கவலைப்படறேன். சண்டை போட்டுப் பெரும் பாசத்தோட இரண்டு சுமைய வேற வாங்கிட்டீங்களே. பசங்க படிப்பு, உத்தியோகம், கல்யாணம் எல்லாத்தையும் நீங்களா நேர் பண்ணணுமேன்னு வேதனைப்படறேன். நான் வக்கீல் மட்டுமில்லை. குடித்தனக்காரன். இரண்டு பொண்ணுப் பெத்தவன். நாளைக்கு என் பொண்ணு புருஷன்கிட்ட அடிபட்டா நிச்சயம் இதைத்தான் செய்வேன். மியூச்சுவலா கன்ஸென்ட் கிடைக்கலேன்னா கோர்ட்ல கேஸ் போட்டு க்ரூயல்டின்னு வாதாடுவேன். டைவர்ஸ் கிடைச்சே ஆகணும்னு அடம் பிடிப்பேன். இத்தனையும்... இத்தனையும் வேதனையோடதான் செய்யணும். முள்ளு குத்துச்சு... புடுங்கிப் போட்டுட்டம். இன்னும் மிச்ச தூரம் நடக்கணுமே.''

''ஏன் நடக்க முடியாது. டைவர்ஸ் வாங்கினதும் ஒரு பொண்ணு கோர்ட் வாசல்ல நெருப்பு வளர்த்து உள்ள பாஞ்சிடணுமா. அப்ப திருப்தியா வூட்டுக்குப் போவீங்களா. தெய்வம்மா நீ... தெய்வம்னு உணர்ச்சி வசப்படுவீங்களா...''

''ஜெயிச்ச சந்தோஷத்துல கூச்சல் போடறீங்கன்னு நினைக்கிறேன். நாளாக நாளாக உங்களுக்கே புரியும். உங்க தனிமை உங்களைத் திணற அடிக்கும்.''

''எனக்கு இரண்டு பசங்க இருக்கு சார்.''

''ஒரு ஊரே சுத்தி இருக்கட்டுமே. அப்பவும் தெரியும். பரிமாறிக்க ஆள் இல்லையேன்னு தோணும்.''

''என்ன சொல்ல வரீங்க.''

''உங்களுக்கு இன்னும் வயசாகலை.''

''ஸோ...''

''மறுபடி திருமணம் செஞ்சுக்கங்க.''

''நெவர். நெவர். விட்டா அப்ளிகேஷன் போட்டுருவீங்க போல இருக்கு.''

''இதான்... இதான் உங்க பயம்.'' வக்கீல் தம் பால் பாயிண்ட் பேனாவைத் தரையில் அடித்தார். ''ராசாத்தி மாதிரி ஒருத்தி என் வூட்ல இருக்கா. நான் எதுக்குப் போடணும் அப்ளிகேஷன்? இதுதான் உங்க பயம். வாய் வார்த்தையாச் சொன்னாக் கூட கடிச்சு முழுங்க வர்றானோன்னு பயம். இந்தப் பயம்தான் இனி உங்களைக் கொல்லப் போவுது.''

''இந்த பயத்துக்குக் காரணம் என் புத்தி இல்லை. என் வளர்ப்பு இல்லை. என் வாழ்க்கை. ஆம்பளை கொடுத்த பயம் இது. பதினாலு வருஷப் படிப்புல தெரிஞ்சுக்கிட்ட பாடம் இது.''

''தப்பாக் கேட்டிருந்தா மன்னிச்சிடுங்கம்மா.''

''ச்சேச்சே.... கவலையோட கேட்கறீங்கன்றது கூடவா புரியாது எனக்கு.''

''வரேம்மா.'' வக்கீல் கைகூப்பினார். வராந்தா தாண்டி மாடிப்படி கூடத்துக்குள் இறங்கி மறைந்தார்.

குழந்தைகள் வீடு வந்ததும் குதித்து இறங்கின. பானுமதி நாற்காலியில் சரிந்து உட்கார்ந்தாள்.

''என்னடி ஆச்சு..?'' அம்மா கேட்டாள்.

''கொடுத்துட்டாங்கம்மா.''

''என்ன பண்ணப் போற?''

''என்ன பண்ணப் போறன்னா?''

''இங்க இருக்கப் போறியா இல்லை, உன் வீட்டுக்குப் போகப் போறியா?''

''ஏன்?''

''உன் தம்பிக்குக் கல்யாணம் ஆகணும். அவனுக்குப் பொண்ணுக் கொடுக்கறவங்க கேப்பாங்களே. இது யாரு. இவ புருஷன் யாரு என்ன தகராறுன்னு. இங்கதான் கடைசி வரைக்கும் இருக்குமா? கடைசி வரைக்கும் இங்கதான் சுமையா இருக்கும்னா யோசிக்கணும்பாங்களே...''

வக்கீலை எதிர்த்து வாயாடின பானுமதி வாயடைத்து உட்கார்ந்திருந்தாள்.

(தொடரும்)



" உற்சவ அன்னை...

# ஆடியில் பொங்கல் வைப்போம்; அம்மனை வழிபடுவோம்!

இன்றைக்கு நானூறு ஆண்டுகளுக்கு முன் வெங்கல் ஜமீன் என்றால் தெரியாதவர்கள் கிடையாது. செங்கை மாவட்டம் திருவள்ளூர் வட்டத்தில் இருந்தது ஜமீன். ஒருநாள், ஜமீனுக்குச் சொந்தமான மாடுகளை மேய்த்துக் கொண்டிருந்த போது குறிப்பிட்ட ஓர் இடத்தில் ஒரு கல்லின் மேல் பசு மாடுகள் பால் சொரிய ஆரம்பித்தன! விஷயம் ஜமீன்தாருக்குப் போயிற்று. ஓடி வந்து பார்த்தார். பூமியிலிருந்து சுயம்புவாய்த் தோன்றியது போல் இருந்தது அந்தக் கல். கல்லின் ஒரு பகுதி பெண்ணின் முகத்தைப் போலவும் இருந்தது. தங்கள் குடும்பத்துக்கு அருள் பாலிக்க அம்மனே தங்கள் நிலத்தில் தோன்றியுள்ளதாகக் கருதி அபிஷேகங்கள் நடத்திச் சிறிய கோயில் ஒன்றைக் கட்டினார் ஜமீன்தார். இதுதான் பெரியபாளையத்தில் பவானி அம்மன் கோயில் உருவான வரலாறு. அப்படி சுயம்புவாய் வந்த பவானிதான் வெள்ளிக் கவசத்துடன் மூலஸ்தானத்தில் காட்சியளிக்கிறாள் என்று சொல்கிறார்கள்.

காலப்போக்கில் கோயில் மிகவும் பிரசித்தமாகி விட்டது. அதுவும் ஆடி மாதத்தில் பக்தர்களின் கூட்டத்துக்குக் கேட்கவே வேண்டாம். ஆடி ஞாயிற்றுக் கிழமைகளில் ஆயிரக்கணக்கில் மக்கள் குவிகிறார்கள். தங்கள் மனவேதனையை அம்மனிடம் கொட்டி ஆறுதல் அடைகிறார்கள். பிணியைத் தீர்த்த அம்மனுக்குத் தங்கள் வேண்டுதல்களைப் பக்திப்பெருக்குடன் செய்து முடிக்கிறார்கள்.

பெரியபாளையத்தில் அம்மனுக்குப் பொங்கல் வைத்து வழிபடுவது மிகச் சிறப்பான ஒன்றென்றால், அதை விடக் குறிப்பிடத்தக்கது, வேப்பஞ்சேலை கட்டிக் கொண்டு கோயிலை வலம் வந்து வேண்டுதலை நிறைவேற்றுவது. ஆண், பெண் வயது வித்தியாசமின்றி வேப்ப இலைகளை உடையாகச் சுற்றிக் கொண்டு பிராகாரத்தைச் சுற்றி வருகிறார்கள்.

கோயிலுக்கு எதிரில் வறட்டிகளைக் கொண்டு அடுப்பு மூட்டிப் பானையில்

பொங்கலிட்டுப் பக்தியுடன் அம்மனுக்குப் படைக்கிறார்கள். அம்மனுக்கு வைக்கும் பொங்கலில் பயத்தம் பருப்பைப் போடாமல், அரிசியைப் பொங்க வைத்து, அதனுடன் வெல்லம் அல்லது சர்க்கரை கலந்து படைக்கிறார்கள். அப்படிப் பொங்கலிட்டுக் கொண்டிருந்தவர்களில் ஒருவரான சாந்தி சொன்னார்: ''வேண்டுதல் என்று இல்லை ஸார். வருஷம் முழுவதும் எங்கள் வீட்டில் அரிசி பொங்க வேண்டுமென்றால், அம்மனின் அருள் வேண்டும். அதற்காகத்தான் அவள் சன்னதியில் ஆண்டுக்கு ஒரு முறை அரிசியைப் பொங்க வைத்து வேண்டிக் கொள்கிறோம்.''

**பெ**ரியபாளையத்துப் பவானி என்றால், சென்னையிலுள்ள மீனவர்களுக்குக் கண் கண்ட தெய்வம். 'கடலில் செல்லும் தன் கணவனை ஒழுங்காக மீண்டும் கரை கொண்டு சேர்ப்பவள் பவானிதான்' என்று அழுத்தம் திருத்தமாக நினைக்கிறார்கள் பரதவர் குலப் பெண்கள். வருடம் ஒரு தடவை கோயிலுக்கு வந்து, கழுத்திலிருக்கும் தாலியை அம்மனுக்குக் காணிக்கையாக்கி விட்டுக் கணவன் கையால் புதுத் தாலி கட்டிக் கொண்டு போகிறார்கள்!



உற்சவ அன்னையை அலங்காரத்தில் பார்ப்பது கண் கொள்ளாக் காட்சி. அன்னை பவானி, வலது மேற்கையில் சக்கரமும் இடப்புறம் சங்கும் ஏந்தி, ஒரு கையில் வாளும் இடக்கையில் அருள்பாலிக்கும் அமுதக் கலசமும் கொண்டு தோற்றமளிப்பதைத் தரிசிக்கும் பக்தர்கள் சிலிர்த்துப் போகிறார்கள்.

**தே**வகியின் வயிற்றில் பிறக்கும் எட்டாவது குழந்தை கம்சனைச் சாகடித்து விடும் என்று அசரீரி கம்சனுக்குச் சொல்லவே, கம்சன் வசுதேவரையும், தேவகியையும் சிறையில் பிடித்துத் தள்ளுகிறான். தேவகிக்குப் பிறக்கும் ஏழு குழந்தைகளையும் ஒவ்வொன்றாகக் கொல்கிறான். எட்டாவதாகக் கண்ணன் அவதரிக்கிறான். யசோதையின் வயிற்றில் பிறக்கும் மாயா

தேவியைக் கண்ணனுக்குப் பதிலாக வைத்து விட்டுக் கண்ணன் யசோதையின் வீட்டுக்குக் கொண்டு செல்லப்படுகிறான். எட்டாவது குழந்தை பெண் குழந்தை என்று கம்சனுக்குச் சொல்லப்படுகிறது. "பெண் ஆனால் என்ன சாகடித்தே தீருவேன்" என்று மாயாதேவியைக் கம்சன் பாறையில் அடித்து, மேலே தூக்கியெறிகிறான். மேலே சென்ற மாயாதேவி தன் அவதாரத்தைக் கம்சனுக்கு விளக்கிக் 'கண்ணன் யசோதையின் இல்லத்தில் வளர்வதையும் சொல்லி விட்டுப் பூமியில் பவானியாய் வந்து அமர்கிறாள். இன்று பெரியபாளையத்தில் அமர்ந்து அருள்பாலிக்கும் பவானி அவள்தான் என்று கோயில் ஸ்தலபுராணம் சொல்கிறது.

அன்னதானம் மாதிரி ஆடி மாதம் கூழ் ஊற்றுவது என்பது மற்றுமொரு வேண்டுதல். வருவோர் போவோருக்கெல்லாம் வீட்டுக்கு வீடு கூழ் ஊற்றுவார்கள். கேழ்வரகு மாவைத் தண்ணீரில் கலந்து, முதல் நாள் இரவே ஊறப் போடுகிறார்கள். அடுத்த நாள் மாலைக்குள் அது நன்றாகப் புளித்துப் போயிருக்கும். பின்னர் அரிசி நொய்யை வேகவைத்துப் புளித்த கேழ்வரகு மாவுடன் கலந்து சரியான விகிதத்தில் உப்புச் சேர்த்து வேகவைக்கிறார்கள். பின்னர் வெங்காயம், பச்சை மிளகாய் போன்றவற்றைக் கலந்தால் கூழ் தயார். பொதுவாக இதற்குத் தொட்டுக் கொள்ள முருங்கைக் கீரைப் பொரியல்தான் என்றாலும் சில இடங்களில் அசைவ சமாச்சாரங்களும் கொடுக்கப்படுவது உண்டு!

இவையெல்லாம் ஒருபுறமிருக்க, பெரியபாளையம் பவானி அம்மனைத் தரிசிக்க வரும் பக்தர்களுக்குப் போதுமான வசதிகள் உள்ளனவா என்றால், பதில் கேள்விக் குறிதான். கோயில் பிராகாரத்தைச் சுற்றிச் சாக்கடை ஓடுகிறது. பன்றிகள் சுற்றுகின்றன. தூரத்திலிருந்து வருபவர்களில் கோயிலை ஒட்டி ஓடும்(?) ஆரணி ஆற்றில் குடிசைகளைப் போட்டுக்கொண்டு இரண்டு நாள் தங்கி, அம்மனைத் தரிசித்து வேண்டுதலை நிறைவேற்றுபவர்களும் உண்டு. அப்படித் தங்குபவர்கள் பாடு திண்டாட்டம்தான்! மழை பெய்தால் பிராகாரத்தில் நிற்க முடியாது. மேலேயிருந்து நீர் சொட்டுவதால் கீழே சேறும் சகதியுமாக இருக்கும். "ஏராளமான வருமானம் வருகிறது. ஒரு வசதியும் செய்து தருவதில்லை" என்று பக்தர்கள் குமுறுகிறார்கள். அதோடு, "ஒவ்வொரு கோயிலுக்கும் பன்னிரண்டு வருடங்களுக்கு ஒருமுறை கும்பாபிஷேகம் நடத்த வேண்டும் என்று ஆகம விதிகள் இருக்கின்றன. ஆனால் இந்தக் கோயிலுக்குக் கும்பாபிஷேகம் நடத்திப் பல்லாண்டுகள் ஆகியிருக்கும்" என்கிறார்கள் உள்ளூர் வாசிகள்.

அம்மனுக்குப் பணிவிடை செய்யும் பூசாரிகள் ஐந்து குடும்பங்களைச் சேர்ந்தவர்கள். பரம்பரை, பரம்பரையாகக் கோயிலில் பூசாரியாக இருப்பவர்கள். இவர்களுக்கும் குறை உண்டு. அர்ச்சனைக் கட்டணத்திலும் அபிஷேகக் கட்டணத்திலும் இவர்களுக்குப் பங்கு இருந்தாலும், "அது போதாது" என்கிறார்கள். ஆனால், "தட்டுக் காசுகள் மூலமாகவே ஆயிரக்கணக்கில் அவர்களுக்கு வருமானம் வருகிறது. வேறு என்ன வேண்டும் அவர்களுக்கு?" என்கிறார் நிர்வாக அதிகாரி!

பக்தர்கள் வசதிகள் பற்றிக் கேட்டால், "மாஸ்டர் பிளான் வைத்திருக்கிறோம்," என்கிறார். பக்தர்கள் தங்க விடுதிகள், கருங்கல்லில் பிராகாரம், நல்ல சுகாதார வசதி, கும்பாபிஷேகம் என்று பல திட்டங்கள் இருக்கின்றனவாம். திட்டத்தை எப்போது நிறைவேற்றப் போகிறார்கள் என்பது அந்த அம்மனுக்கே வெளிச்சம்!

— கௌசல்யா

வண்ணப்படங்கள்: காசி விசுவநாதன்

## அறிவுக்கு வலது; மென்மைக்கு இடது



தொலைபேசியில் அறிவு பூர்வமாக எதையாவது விவாதிக்க வேண்டுமா? தொலைபேசியை வலது காதில் வைத்துக் கொண்டு பேசுங்கள். வலது பக்க நரம்புகள் மூளையின் இடது பக்கம் தொடர்புடையவை. இந்தப் பகுதிதான் தர்க்கரீதியான சிந்தனையைக் கட்டுப்படுத்துகிறது. மென்மையாக, பரிவுணர்ச்சியுடன் பேச, இடது பக்கத்தை உபயோகியுங்கள். இந்தத் தகவலை வெளியிடுபவர்கள் 'பிரிட்டிஷ் டெலி கம்யூனிகேஷன் ஸ்தாபனம்'

நன்றி: பிஸினஸ் இண்டியா.

தகவல்: ஆர். கிருஷ்ணவேணி.



# கலைந்து போன மேகங்கள்

கிருஷ்ணா

''ஹரி, கொஞ்சம் காற்றாட வெளியில நடந்துட்டு வரலாமா?'' என்று அப்பா கேட்டதும் கேள்விக்குறியுடன் அவரைப் பார்த்தேன்.

அப்பா நேற்றுத்தான் ஊரிலிருந்து வந்தார். அம்மா கிராமத்திலே இருக்கிறாள். பென்ஷன் விஷயமாக ஹெட் ஆபீஸுக்கு வந்திருப்பதாகச் சொன்னார்.

''ராகினி, நாங்க ரெண்டு பேரும் அப்படியே கோயில் வரைக்கும் போயிட்டு வர்றோம். கதவைத் தாழ் போட்டுக்க'' என்று என் மனைவியிடம் சொல்லிவிட்டுச் செருப்பை மாட்டிக் கொண்டு வெளியில் வந்தவரைத் தொடர்ந்தேன்.

அப்பா என் மனநிலையைக் கண்டுபிடித்திருப்பாரோ? என்னதான் நான், ராகினியுடன் சுமுகமாக இருப்பது போல நடித்தாலும் செயற்கையான என் நடவடிக்கைகளை அவர் புரிந்து கொண்டிருப்பாரோ?

ராகினியை நினைத்தவுடன் மாத்திரை சாப்பிட்டதும் நாக்கில் தங்கும் ஒரு கசப் புணர்ச்சி என்னுள் ஏற்பட்டது.

மனைவி என்பவள் எப்படியெல்லாம் இருக்க வேண்டும் என்று எவ்வளவு கற்பனை செய்து வைத்திருந்தேன்? அத்தனையையும் தூள் தூளாக்கி விட்டாளே இவள்...?

நான் காலையில் ஆபீஸ் புறப்படும் போது தயாராய் டிபன் பாக்ஸ், ஆபீஸ் பையை எடுத்து என் கையில் கொடுத்து, 'சாயந்திரம் சீக்கிரம் வந்துடுங்க...' என்று கொஞ்சலாய்ச் சிரித்து, ஆபீஸில் வேலையே ஓடாமல் அவள் உதட்டைச் சுழித்து, 'வந்துடுங்க' என்று சொன்னதையே நினைத்து நான் அலைபாய்ந்து... மாலை ஐந்து மணி அடித்தவுடன் பளிச்சென்று ட்ரெஸ் செய்து கொண்டு எனக்காகக் காத்திருக்கும் அவளை நினைத்தபடி நான் பறந்து வந்து அவள் கையில் மல்லிகைப்

பந்தைக் கொடுத்து... சே! அவ்வளவு இனிய கற்பனைகளும் கானலாகி விட்டனவே!

சரி, வீட்டையாவது சுத்தமாக வைத்திருக்கிறாளா என்றால் அதுவுமில்லை. என் வீட்டில் அம்மாவுக்கு ஒரு தூசு துரும்பு கூடத்தில் இருந்தாலும் பிடிக்காது.

அம்மா வளர்த்த முறையினாலோ, என்னவோ நான் 'எங்கும் சுத்தம், எதிலும் சுத்தம்' பார்ப்பவன். அதனால் வீட்டுச் சூழ்நிலை அறவே பிடிக்கவில்லை. நானே பொறுமையாய்ப் பலமுறை வீட்டைச் சுத்தப்படுத்தியிருக்கிறேன்!

அப்போது, "இதோ, இந்தக் கதவு இடுக்கிலே ஒரே ஒரு நூலாம்படை ஒட்டிக்கிட்டிருக்கு பாருங்க" என்று பலவாறாகக் கிண்டல் செய்வாள்.

அவள் குணம் தெரிந்ததால் நான் அதைப் பொருட்படுத்துவதில்லை. ஆனால், அதே போல நான் அவளைச் சற்றுக் கிண்டல் செய்தால் அவ்வளவுதான்.

"என்னைக் குத்திக் காட்டிப் பேசறதே உங்களுக்குத் தொழிலாப் போச்சு. அதுல ஒரு குரூரத் திருப்தி" என்று பிளேட்டை என் பக்கமே திருப்பி என்னை நிலை குலையச் செய்வாள்.

**"ஏ**ன்னடா, நாம் என்ன மௌன ஊர்வலமா போறோம்?" என்று அப்பா கேட்டதும் விழித்துக் கொண்டேன்.

"அ... அதெல்லாம் ஒண்ணுமில்லையேப்பா" என்றேன், வழிந்தபடி.

"டேய் கண்ணா, மனுஷன் தனக்குள்ளேயே முடங்கிக்கிறான்னா ஒண்ணு ஏதாவது பிரச்னையா இருக்கணும். இல்லை பேசறதுக்கு ஆள் இல்லாம இருக்கணும். சரி சொல்லு" என்று பட்டென்று நேரிடையாகக் கேட்கவும் திகைத்தேன்.

"இங்கே பாரு ஹரி, நான் உன்னைப் பெத்தவன். உனக்குக் கல்யாணமாகி ஒரு வருஷம் கூட ஆகலே. ஆனால், நீயும் ராகினியும் புதுசாக் கல்யாணம் ஆனவங்க மாதிரியே நடந்துக்கலே. அதுக்குள்ளேயே உங்களுக்குள்ளே சலிப்பு வரவும் வாய்ப்பில்லே. அதனாலதான் உங்களுக்குள்ளே ஏதோ பிரச்னைன்னு புரிஞ்சுக்கிட்டேன்" என்று அப்பா உண்மையைப் பிட்டு வைக்கவும், அதற்கு மேல் தாளாமல் என் மன ஏக்கங்களையும், ராகினியின் போக்கையும் அவரிடம் கொட்டினேன்.

சற்று நேரம் மௌனமாக நடந்தோம். அதற்குள் கோவில் வந்துவிட்டது. கோவில் மண்டபத்தில் அப்பா அமர, நானும் தூணில் சாய்ந்தபடி உட்கார்ந்தேன்.

"இன்னிக்குக் காலையிலே வீட்டிலேயிருந்து புறப்பட்டு நீ ஆபீஸ் போயிட்டு வந்த வரைக்கும் நடந்த சம்பவங்களையெல்லாம் அப்படியே சொல்லு" என்று அப்பா சம்பந்தமில்லாமல் கேட்கவும் குழப்பத்துடன் சொல்ல ஆரம்பித்தேன்.

"காலையிலே ஸ்கூட்டர்லே ஆபீஸுக்குக் கிளம்பினேன். வழியிலே எங்க ஆபீஸ் மானேஜர் பைக் ரிப்பேராயிட்டுதுன்னு சொல்லி நின்னுக்கிட்டு இருந்தார் தம் பையனோட."

"ம்! அப்புறம்?"

"ஹரி, என் பையனை ஸ்கூட்டர்ல விட்டுட்டு நான் உடனே ஆபீஸ் போயாகணும். இன்னிக்கு டைரக்டர் பம்பாயிலேயிருந்து வர்றார்னு உங்களுக்குத்தான் தெரியுமே! இப்பவே லேட்டாயிடுச்சு. அதனால நீங்க உங்க ஸ்கூட்டரைக் கொஞ்சம் கொடுத்து உதவ முடியுமா'ன்னு கேட்டார்."

"உனக்கு அதற்குச் சம்மதமா?" என்றார் அப்பா இடைமறித்து.

"இல்லைதான். இவரிடம் ஸ்கூட்டரைக் கொடுத்துட்டா நான் பஸ் கூட்டத்திலே நசுங்கிக் கஷ்டப்பட்டுல்லே ஆபீஸுக்குப் போகணும். அவர் ஒரு ஆட்டோவிலே போயிருக்கலாம். மகா கஞ்சன் அவர். ஆனாலும் மானேஜராச்சே. அதனால மறுக்க முடியலே!"

"சரி, மேலே சொல்லு!"

"ஆபீஸ்ல, மதியம் என்னை வேறு செக்ஷனுக்கு மாத்தியிருக்காங்கன்னு சொன்னாங்க."

"ஏன்?"

"எங்க செக்ஷன் ஹெட்டோட ரிலேடிவ் ஒருத்தர் என் சீட்டுக்கு வர ஆசைப்பட்டதினாலே இந்த ட்ரான்ஸ்ஃபர்."

"நீ அதை எதிர்க்கலையா ஹரி?"

"மானேஜரிடம் போய் முறையிட்டேன். ஆனால் ரெகமென்டேஷன்தான் ஜெயிச்சது. எனக்குப் பிடிக்கலேதான். ஆனாலும் என்ன செய்ய முடியும்?" என்று கேட்டுவிட்டு அப்பாவைப் பார்த்தேன்.

அவர் முகத்தில் புன்சிரிப்பு விரிந்தது.

"என்னப்பா...?"

"உதட்டளவிலே மட்டுமே பழகற வெளி மனிதர்களிடமும், வெளியிலே நடக்கிற செயல்களிடமும் உன்னை விட்டுக்கொடுத்து அட்ஜஸ்ட் பண்ணிட்டுப் போறியே, தன்னையே உன்னிடம் ஒப்படைச்சு, உன்னையே நம்பி வந்திருக்கிற உன் மனைவியிடம் விட்டுக் கொடுத்துப் போனால் என்ன?"

"அப்பா...?!"

"ஆமான்டா. ஒவ்வொரு மனிதனிடமும் ஒரே மாதிரி குணநலன்களை எதிர்பார்க்க முடியாது. நீ எதிர்பார்க்கிற மாதிரி மனைவி வேணும்னா, ரோபாட் மாதிரி கம்ப்யூட்டர்லே இயங்கற ஒரு பொம்மையைத்தான் கல்யாணம் செஞ்சுக்கணும். அதுவா புத்திசாலித்தனம்? குற்றம் குறை இல்லாத மனுஷங்க யாரு சொல்லு?" என்று அவர் சொல்லவும் கோவில் மணி டணார், டணாரென்று அடித்தது.

தெளிந்த உள்ளத்துடன் வீட்டுக்குத் திரும்பினேன்.

# பொன்னியின் செல்வன்

அத்தியாயம் 18

## ஏமாந்த யானைப் பாகன்

“சந்தர்ப்பம் என்பது கடவுளுக்கு ஒரு புனை பெயர்” என்பதாகத் தற்கால அறிஞர் ஒருவர் கூறியிருக்கிறார். கடவுள் தாம் செய்யும் காரியத்தைத் தாம் செய்தது என்று காட்டிக் கொள்ள விரும்பாத போது “சந்தர்ப்பம்” என்னும் புனை பெயரைச் சூட்டிக் கொள்ளுகிறாராம்! உலக சரித்திரத்தில் மிகப் பிரசித்தி பெற்ற வீரர்கள், அரும் பெரும் காரியங்களைச் சாதித்த மகான்கள், — இவர்களுடைய வரலாறுகளைப் பார்க்கும் போது, சந்தர்ப்பம் இவர்களுக்கு மிக்க உதவி செய்திருக்கிறது என்பதை அறியலாம். அவர்களிடம் கடவுள் விசேஷ கருணை காட்டி அத்தகைய சந்தர்ப்பங்களை அனுப்புவதாகச் சிலர் கூறுவர். அவரவர்கள் பிறந்த வேளையின் மகிமை, ஜாதகத்தின் பலன், பிரம்மா எழுதிய எழுத்து, பூர்வஜன்ம சுகிர்தம், — என்றெல்லாம் வாழ்க்கையில் ஏற்படும் அனுகூலமான சந்தர்ப்பங்களுக்குக் காரணங்கள் கற்பிப்போரும் உண்டு.

நம் காலத்தில் காந்தி மகான் தென்னாப்பிரிக்கா போவதற்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்படாதிருந்தால், அவர் ‘மனித குல சிரேஷ்டர் என்றும் அவதார புருஷர் என்றும் மக்களால் போற்றப்படும் நிலையை அடைந்திருக்க முடியுமா?

சந்திரகுப்தன், விக்கிரமாதித்தன், ஜூலியஸ் ஸீஸர், நெப்போலியன், டியூக் ஆப் வில்லிங்டன், ஜார்ஜ் வாஷிங்டன், ஜோசப் ஸ்டாலின் போன்ற மகா வீரர்களின் வாழ்க்கையில் சந்தர்ப்பங்கள் எவ்வளவோ உதவி செய்திருக்கின்றன என்பதை அறிந்திருக்கிறோம்.

இதிலிருந்து, ஆண்டவன் அவ்வளவு பாரபட்சமுள்ளவர் என்று முடிவு கட்டுதல் தவறாகும். சரித்திரத்தில் புகழ்பெற்ற மகான்களையும் வீரர்களையும் தவிர இன்னும் எத்தனையோ பேருக்கும் ஆண்டவன் சந்தர்ப்பங்களை அனுப்பிக் கொண்டுதானிருக்கிறார்.

ஆனால் அந்தச் சந்தர்ப்பங்களைப் பயன்படுத்திக் கொள்வது மனிதனுடைய சமயோசித அறிவையும், சரியான சமயத்தில் சரியான முடிவு செய்யும் ஆற்றலையும் பொறுத்தது. சந்தர்ப்பங்களைக் கை நழுவ விடுகிறவர் கோடானுகோடிப் பேர் பெயரும் புகழும் இல்லாமல் சாதாரண வாழ்க்கை வாழ்ந்து உலகை விட்டுச் செல்லுகிறார்கள். சந்தர்ப்பங்களைச் சரிவரப் பயன்படுத்திக் கொள்கிறவர்கள் சரித்திரத்தில் தங்கள் பெயரை நிலைநாட்டி விட்டுச் செல்கிறார்கள்.

ஒரே நாளில், ஒரே நேரத்தில் பிறக்கிறவர்களின் வாழ்க்கைத் தரம் எவ்வளவோ வித்தியாசமாயிருப்பதற்குக் காரணம் வேறு என்ன சொல்ல முடியும்?



ளவரசர் அருள்மொழிவர்மரின் வாழ்க்கையில் இப்போது அத்தகைய சந்தர்ப்பம் ஒன்று நேர்ந்தது. யானை தன் அருகில் நெருங்கிய யானைப் பாகனைத் தூக்கி எறிந்த போது, “யானைக்கு மதம் பிடித்து

அமரர் கல்கி

விட்டது!'' என்ற கூச்சல் கிளம்பிய போது, அந்தச் சந்தர்ப்பம் அவரை வந்தடைந்தது. அதை அவர் பயன்படுத்திக் கொள்ளாமல் விட்டிருந்தால், இந்த வரலாறு வேறுவிதமாகப் போயிருக்கும். தமிழ் நாட்டின் சரித்திரத்தில் இராஜராஜ சோழர் உன்னத ஸ்தானத்துக்கு வந்திருக்கவும் முடியாது.

அதிர்ஷ்டவசமாக அந்தச் சந்தர்ப்பத்தைத் தெரிந்து கொண்டு அதை உபயோகப் படுத்திக் கொள்ளும் சமயோசித அறிவாற்றல் அவரிடம் இருந்தது. படகோட்டி முருகய்யன் முதல் நாள் கூறிய வரலாற்றை நினைவுபடுத்திக் கொண்டார். யானையை நெருங்கி வந்தவன் உண்மையான யானைப் பாகன் அல்ல, ஏதோ தீய நோக்கத்துடன் வந்தவன், அதனாலேதான் யானை அவனைத் தூக்கி எறிந்திருக்கிறது என்பதையும் ஒரு நொடியில் ஊகித்துக் கொண்டார். வந்தவன் யார், எதற்காக வந்தான் என்பதையெல்லாம் அச் சமயம் கண்டு பிடிக்க முயன்றால், கிடைத்த சந்தர்ப்பம் தவறிப் போய் விடும். ''யானைக்கு மதம் பிடித்து விட்டது!'' என்ற கூச்சலினால் மக்களிடையே உண்டான குழப்பத்தைப் பின்னர் பயன்படுத்திக் கொள்ள முடியாது. அந்த ஜனக் கூட்டத்தினிடையிலிருந்து தப்பிச் சென்று கூடிய விரைவில் தஞ்சையை அடைவது அச் சமயம் அவருடைய பிரதான நோக்கமாயிருந்தது. அந்த நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள இதைக் காட்டிலும் சரியான சந்தர்ப்பம் கிடைக்கப் போவதில்லை.

ஆதலின், முருகய்யனைத் தம் அருகில் அழைத்து, அவன் காதோடு ஏதோ சொல்லி விட்டு, அவன் தோள் மீது ஏறி யானையின் மீது தாவினார். அப்படித் தாவும்போதே யானை மேலிருந்த அம்பாரியைத் தட்டி விட்டார். அம்பாரி கீழே விழுந்து உருண்டது. பின்னர், யானையிடத்திலும் அதன் பாஷையில் ஏதோ சொன்னார். உடனே யானை பிய்த்துக் கொண்டு கிளம்பியது. முன்போல, பயங்கரமான குரலில் பிளிறிக் கொண்டே விரைவாக நடந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் ஓடவே தொடங்கி விட்டது.

அதே சமயத்தில் முருகய்யன் ''ஐயோ! யானைக்கு மதம் பிடித்து விட்டது! ஓடுங்கள்! ஓடுங்கள்! உடனே ஓடுங்கள்!'' என்று பெருங் கூச்சலிட்டான்.

ஜனங்கள் முன்னைக் காட்டிலும் அதிக பீதியடைந்து நானாபுறமும் சிதறி ஓடினார்கள். அக்கம் பக்கத்திலிருந்த குறுக்கு வீதிகளிலும் சந்துகளிலும் புகுந்து ஓடினார்கள். திறந்திருந்த வீடுகளுக்குள் நுழைந்து ஒளிந்து கொண்டார்கள். வேறு எதற்கும் அஞ்சாத தீர நெஞ்சமுள்ளவர்களும் மதங் கொண்ட யானை என்றால் ஓடத்தான் செய்ய வேண்டும். எப்பேர்ப்பட்ட வீராதி வீரனானாலும் மதங் கொண்ட யானையை எதிர்க்க முடியாது. ஆயுதங்களுடனே எதிர்த்து நிற்பதும் இயலாத காரியம். நிராயுதபாணிகளான ஜனங்கள், ஆண்களும் பெண்களும் முதியோர்களும் பாலர்களும், மதயானைக்கு முன்னால் சிதறி ஓடாமல் வேறு என்ன செய்ய முடியும்?

திருவாரூர் நகரத்தைத் தாண்டியதும், இளவரசர் யானையை நேரே தஞ்சாவூர்ச் சாலையில் செலுத்துவதற்குப் பதிலாக, வடமேற்குத் திசையை நோக்கித் திருப்பினார். முதலிலேயே அவருக்கு வழியில் பழையாறையை அடைந்து அங்கே தம் திருத்தமக்கையார் இருந்தால், அவரைப் பார்த்துப் பேசி விட்டுத் தஞ்சை போக வேண்டும் என்ற எண்ணம் இருந்தது. இப்போது அது ஊர்ஜிதம் ஆயிற்று. மதம் பிடித்த யானை குறுக்கே விழுந்து ஓடுவதுதான் இயற்கையாயிருக்கும். தஞ்சைச் சாலையில் சென்றால் மக்கள் தம்மை விடாமல் தொடர்ந்து வரக்கூடும். வழியில்லாத வழியில் யானை போய் விட்டால், ஜனங்கள் தொடர்ந்து வர முடியாது!

இவ்விதம் அதி விரைவில் சிந்தித்து முடிவு செய்து, யானையை வடமேற்குத் திசையில் குறுக்கு வழியில் செலுத்தினார். வயல்கள், வரப்புகள், வாய்க்கால்கள், நதிகள், அவற்றின் உடைப்புகள், — இவை ஒன்றையும் பொருட்படுத்தாமல் யானை ஜாம் ஜாம் என்று மனம் போன போக்கில் சென்றது. இளவரசரின் உள்ளமும் இனந்தெரியாத உற்சாகத்தை அடைந்து, கூண்டிலிருந்து விடுதலை அடைந்த பறவையைப் போல் ஆகாச வெளியில் வட்டமிட்டுத் திரிந்தது. தம்முடைய வாழ் நாளில் ஒரு முக்கியமான கட்டத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறோம் என்னும் உள்ளுணர்ச்சியிலிருந்து உற்சாகமும் பரபரப்பும் பொங்கிக் கொண்டிருந்தன..

யானை ஓடத் தொடங்கிய அதே சமயத்தில் முருகய்யனும் ''யானைக்கு மதம் பிடித்து விட்டது!'' என்று கூச்சலிட்டுக் கொண்டு ஓடினான். யானையினால் தூக்கி எறியப்பட்ட பாகன் விழுந்த இடத்தைச் சுமாராகக் குறி வைத்துக் கொண்டு சென்றான். இளவரசர் தங்கியிருந்த சோழ மாளிகைக்குச் சற்றுத் தூரத்தில் நாடெங்கும் புகழ் பெற்ற கமலாலயம் என்னும் தடாகம் இருந்தது. அந்தக் குளக்கரையின் அருகில் சென்று பார்த்தான். யானைக்குப் பயந்தவர்கள் பலர் குளக்கரையில் இறங்கி நின்றார்கள். சிலர் குளத்தில் தண்ணீரிலே கூட இறங்கியிருந்தார்கள். ஒரு மனிதன் தட்டுத் தடுமாறி நீந்திக் கரையேறிக் கொண்டிருந்தான். அவனை

முருகய்யன் உற்றுப் பார்த்தான். முதல் நாளிரவு யானைப்பாகனையும் ராக்கம்மாளையும் அழைத்துக் கொண்டு போன மந்திரவாதிதான் அவன்! அதிர்ஷ்டக்காரன்! ஆயுள் ரொம்பக் கெட்டி! யானை தூக்கி எறிந்தும் உயிர் பிழைத்திருக்கிறான் அல்லவா? கையில் அங்குசத்துடன் சற்று முன் யானையை நோக்கி ஓடி வந்தவன் இவனே தான்...! அங்குசம் என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. அதுவும் குளத்தில் விழுந்து விட்டதா?

முருகய்யன் அவன் அருகில் சென்று, ''யானைப் பாகா! நல்லவேளை பிழைத்து எழுந்து வந்தாய்! அங்குசம் எங்கே?'' என்று கேட்டான்.

ரேவதாஸன் என்னும் கிரமவித்தன் முருகய்யனை ஏற இறங்கப் பார்த்து விட்டு, ''என்னப்பா கேட்கிறாய்? நீ யார்? நான் இப்போதுதான் குளத்தில் குளித்து விட்டுக் கரை ஏறுகிறேன்!'' என்று சொன்னான்.

''ஓகோ! அப்படியா? நீ யானைப் பாகன் இல்லையா? யானை தூக்கி எறிந்தது உன்னை அல்லவா? அப்படியானால், யானைப்பாகன் எங்கே இருக்கிறான்?'' என்று கேட்டான்.

கிரமவித்தன் மேலும் திகைப்புடன், ''நான் என்ன கண்டேன்? என்னை ஏன் கேட்கிறாய்?'' என்றான்.

''மந்திரவாதி! என்னை ஏன் ஏமாற்றப் பார்க்கிறாய்? நேற்றிரவு 'யானைப் பாகனை இடுகாட்டுக்கு அழைத்துப் போய் 'இளவரசர் ஏறும் யானைக்கு மதம் பிடிக்கும்' என்று எச்சரிக்கை செய்தாயே? அப்படியிருக்க, அந்த எச்சரிக்கையை நீயே மறந்து விட்டு யானையிடம் அகப்பட்டுக் கொண்டாயே? அது உன் பாடு! யானைப் பாகன் எங்கே? என் மனைவி ராக்கம்மாள் எங்கே?'' என்று கேட்டான் முருகய்யன்.

கிரமவித்தன் முகத்தில் முன்னை விடத் திகைப்பும் பீதியும் அதிகமாயின.

''யானைப்பாகனாவது? ராக்கம்மாளாவது? உனக்கு என்ன பைத்தியமா?'' என்று சொல்லிக் கொண்டே கிரமவித்தன் சுற்று முற்றும் பார்க்கலானான்.

''ஆம், ஆம்! யானைக்கு மதம் பிடித்தது போலத்தான் எனக்கும் பைத்தியம் பிடித்திருக்கிறது! யானைப் பாகன் எங்கே என்று மட்டும் சொல்லி விடு! இல்லாவிடில்....'' என்று முருகய்யன் சிறிது அதிகார தோரணையில் அவனிடம் பேசத் தொடங்கினான்.

சுற்று முற்றும் பார்த்துக் கொண்டிருந்த ரேவதாஸன் இப்போது முருகய்யனைப் பார்த்துப் புன்னகை புரிந்தான்.

''நீ என்னை 'மந்திரவாதி' என்கிறாய்! நீ என்னை விடப் பெரிய மந்திரவாதியாயிருக்கிறாயே! உனக்கு எல்லாம் தெரிந்திருக்கிறது! உன்னிடம் மறைப்பதில் பயனில்லை. 'யானைக்கு மதம் பிடிக்கப் போகிறது! அதன்பேரில் ஏற வேண்டாம்' என்று இளவரசருக்கு எச்சரிக்கை செய்வதற்காகவே ஓடி வந்தேன். அதன் பலன் இப்படி ஆயிற்று. உன் மனைவியும் யானைப் பாகனும் அங்கே ஒரு வீட்டில் இருக்கிறார்கள். அவர்களை நீ பார்க்க விரும்பினால், நானே அழைத்துப் போகிறேன். இளவரசருக்கு ஒன்றும் நேரவில்லையே? சௌக்கியமாயிருக்கிறார் அல்லவா?'' என்றான்.

''இளவரசர் சௌக்கியம். அவர்தான் உன்னையும் யானைப்பாகனையும் அழைத்துக் கொண்டு வரும்படி எனக்குக் கட்டளையிட்டார்.....''

''இளவரசரிடம் எனக்கு நல்ல பரிசு வாங்கித் தரவேண்டும்! தெரிகிறதா? பார்க்கப் போனால், அவரை நான் காப்பாற்றி விட்டது உண்மைதானே? ஆ! அதோ...!'' என்று மந்திரவாதி வியப்புடன் கூறி நிறுத்தினான்.



ந்திரவாதி உற்று நோக்கிய இடத்தில், குளத்தின் கரையோரமிருந்த அரளிச் செடிப் புதர்களில் வேல் முனை போன்ற ஒன்று சிறிது தெரிந்தது.

''ஆ! அங்குசம்!'' என்று சொல்லிக் கொண்டே மந்திரவாதி அந்த அரளிச் செடிப் புதரை நோக்கி ஓடினான்.

முருகய்யன் அவனைவிட விரைந்து ஓடி அரளிச் செடிப் புதர்களில் புகுந்து அங்குசத்தின் அடிப்பிடியைப் பிடித்து ஜாக்கிரதையாக எடுத்துக் கொண்டான்.

பின்னர், திரும்பிப் பார்த்தான். மந்திரவாதியைக் காணவில்லை. ''அடடா! ஏமாந்து போய் விட்டோமே?'' என்ற துணுக்கத்துடன் அங்குமிங்கும் ஓடிப் பார்த்தான். பயனில்லை. குளக்கரையில் கூடியிருந்த பெரும் ஜனக் கூட்டத்தின் மத்தியில் புகுந்து மந்திரவாதி கிரமவித்தன் மாயமாய் மறைந்து விட்டான்.

மதயானை ஓடிப் போன பிறகு, ஜனங்கள் மறுபடியும் திரும்பிச் சோழ மாளிகையை நெருங்கி வந்து கொண்டிருப்பதை முருகய்யன் கண்டான்.

ஆனால் அங்கே அவன் நிற்கவில்லை.

முதல் நாள் மந்திரவாதியை அவன் பார்த்த வீடு எந்தத் திசையில் இருந்தது என்பதை நினைத்துப் பார்த்துக் கொண்டு, அதை நோக்கிச் சென்றான். வழியெல்லாம், இராஜ வீதிகளிலெல்லாம், ஜனங்கள் ஆங்காங்கு கூடிக் கூடி நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். மத யானை ஓடியதைப் பார்த்தவர்களில் சிலர், ''யானையின் பேரில் யாரோ ஆள் இருந்ததாகத் தோன்றியது'' என்றார்கள். மற்றும் சிலர் அதை மறுத்தார்கள்.'' அது எப்படி இருக்க முடியும்? யானைப் பாகனைத் தூக்கி எறிந்தவுடனேதான் யானை ஓடத் தொடங்கி விட்டதே? அதன்



பேரில் யார் ஏறியிருக்க முடியும்?'' என்றார்கள். எல்லாரும் இவ்வாறு விவாதித்துக் கொண்டே சோழ மாளிகையை நோக்கித் திரும்பிச் சென்று கொண்டிருந்தார்கள். தங்கள் இதயங் கவர்ந்த இளவரசருக்கு அபாயம் ஒன்றும் நேரவில்லை என்பதை உறுதிப்படுத்திக் கொள்வதற்கு ஜனங்கள் அனைவரும் ஆவலாக இருந்தார்கள்

முருகய்யன் ஜனங்கள் வந்த திசைக்கு எதிர்த் திசையாகச் சென்று குறிப்பிட்ட சந்தை அடைந்தான். அங்கே அப்போது ஜனநடமாட்டமே இருக்கவில்லை. எல்லாரும் இராஜ வீதிகளுக்குப் போய் விட்டார்கள். இரவில் பார்த்த வீட்டைப் பகலில் அவ்வளவு சுலபமாக அடையாளம் கண்டு பிடிக்க முடியவில்லை. உற்றுப் பார்த்துக் கொண்டே முருகய்யன் போனான். ஒரு வீடு மட்டும் வெளிப்புறம் பூட்டப்பட்டிருந்தது. உள்ளேயிருந்து ஏதோ முனகல் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. அந்த வீட்டுக்குப் பக்கத்தில் ஒரு பாழும் வீடு இருந்தது. முருகய்யன் அந்தப் பாழும் வீட்டில் புகுந்து அடுத்த வீட்டின் மேற் கூரையில் ஏறி முற்றத்தில் குதித்தான். அவன் எதிர்பார்த்தபடியே அங்கே யானைப்பாகன் தென்பட்டான். அவன் வெறி கொண்டவனைப் போல் தோன்றினான். அவனுடைய கால்களையும் கைகளையும் கட்டியிருந்ததுமல்லாமல் ஒரு தூணோடும் அவனைச் சேர்த்துக் கட்டியிருந்தது. யானைப்பாகன் தன் கைக் கட்டுகளைப் பல்லால் கடித்து அவிழ்க்கப் பெரு முயற்சி செய்து கொண்டிருந்தான். நடு நடுவில் கடிப்பதை நிறுத்தி விட்டுக் கூச்சல் போட்டுக் கொண்டுமிருந்தான்.

முருகய்யனைப் பார்த்ததும் அவன் முகத்தில் சிறிது தெளிவு ஏற்பட்டது. நாகைப் பட்டினத்திலேயே அவன் முருகய்யனைப் பார்த்திருந்தான். இளவரசருக்கு வேண்டியவன் என்பதையும் அறிந்து கொண்டிருந்தான். ஆகையால் இப்போது பரபரப்புடன், ''முருகய்யா! அவிழ்த்து விடு! அவிழ்த்து விடு! சண்டாளர்கள் என்னை ஏமாற்றி விட்டார்கள்! இளவரசருக்கு அபாயம் ஒன்றும் நேரவில்லையே?'' என்றான்.

முருகய்யன் கட்டுக்களை அவிழ்த்து விட்டுக் கொண்டே காலையில் நடந்தவற்றைச் சுருக்கமாகக் கூறி விட்டு, யானைப் பாகனிடம் அவனுக்கு நேர்ந்தது என்னவென்று விசாரித்தான். யானைப்பாகனும் ஒருவாறு தட்டுத்தடுமாறிக் கூறினான். யானைக்கு மதம் பிடித்தாலும் தனக்கு ஒன்றும் நேராமல் மந்திர கவசம் தருவதாகச் சொல்லி இந்த வீட்டுக்கு அழைத்து வந்தார்கள் என்றும், இங்கே வந்ததும் சாம்பிராணிப் புகை போட்டுக் கொண்டே மந்திரவாதி மந்திரம் ஜபித்தான் என்றும், அப்போது தனக்கு மயக்கமாக வந்து தாங்கி விழுந்து விட்டதாகவும், கண் விழித்துப் பார்த்த போது தன்னைத் தூணோடு கட்டிப் போட்டிருந்ததாகவும் கூறினான்.

இருவரும் அந்த வீட்டை விட்டு வெளியேறிச் சோழ மாளிகையை நோக்கி விரைந்து சென்றார்கள்.

அவர்கள் அம் மாளிகையை அடைந்த போது அங்கே முன்னை விடப் பெருங் கூட்டம் கூடியிருப்பதையும் ஜனங்கள் மிக்க கவலையோடு பேசிக் கொண்டிருப்பதையும் கண்டார்கள்.

ஜனங்களின் கவலைக்குக் காரணம், இளவரசரைக் காணோம் என்பதுதான். அவருக்கு என்ன நேர்ந்தது என்பதைத் திட்டமாக அறிந்தவர்கள் அங்கு யாரும் இல்லை. யானை மேல் ஒருவர் இருந்ததைப் பார்த்ததாக மட்டும் சிலர் கூறினார்கள். அவர் ஒரு வேளை இளவரசராக இருக்கலாம் என்று ஊகித்தார்கள்.

இளவரசர் யானைகளைப் பழக்கும் வித்தையில் மிகத் தேர்ந்தவர் என்பதும், யானைகளின் பாஷைகூட அவருக்குத் தெரியும் என்பதும் சோழ நாட்டில் பிரசித்தமாயிருந்தன. ஆகையால், மதங் கொண்ட யானையினால் ஒருவருக்கும் தீங்கு நேரிடாமல் அதன் மதத்தை அடக்கும் பொருட்டுப் பொன்னியின் செல்வர் யானை மேல் ஏறிச் சென்றிருக்க வேண்டும் என்று சிலர் தங்கள் உறுதியான நம்பிக்கையைத் தெரிவித்தார்கள்.

இச் சமயத்தில் அங்கே முருகய்யனும் யானைப்பாகனும் வந்தார்கள். யானைப் பாகனுக்கு நேற்றிரவு நேர்ந்தது அங்குள்ளவர்களுக்குத் தெரிந்த போது, அவர்களுடைய வியப்பும் திகைப்பும் பன்மடங்கு அதிகமாயின.

யானைப்பாகனைக் கட்டிப் போட்டு விட்டு, அங்குசத்தை எடுத்துக் கொண்டு ஓடி வந்தவன் சோழ குலத்தின் விரோதிகளால் அனுப்பப்பட்டவனாயிருக்க வேண்டும். ''ஒருவேளை பழுவேட்டரையர்களே அனுப்பியிருக்கக் கூடும்!'' என்று சிலர் ஊகித்துக் கூறியதைப் பெரும்பாலான மக்கள் நம்பினார்கள். அதனால் பழுவேட்டரையர்களின் மீது அவர்களுடைய கோபம் அதிகமாயிற்று. அந்தக் கோப வெறியுடனே பலர் உடனே தஞ்சையை நோக்கிக் கிளம்பினார்கள். யானை போன வழியை விசாரித்துக் கொண்டு ஒரு பகுதியினரும், தஞ்சாவூருக்கு நேரே போகும் சாலையில் மற்றவர்களும் கோபாவேசத்துடன் புறப்பட்டுச் சென்றார்கள்.

அத்தியாயம் 19

## திருநல்லம்

ஜோசியர் வீட்டின் ஓட்டுக் கூரையையும் அதனுடன் தன்னுடைய உயிரையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்த வானதி காவேரி நதியின் உடைப்பு வெள்ளத்தில் மிதந்து மிதந்து போய்க் கொண்டிருந்தாள். வெள்ளம் அவளை மேலே மேலே அழைத்துக் கொண்டு கிழக்கு நோக்கிச் சென்றது. சில சமயம் மெதுவாகச் சென்றது. சில சமயம் வேகமாக இழுத்துச் சென்றது. வேறு சிலபோது பெரிய சுழிகளிலும் சுழல்களிலும் அந்த வீட்டுக் கூரை அகப்பட்டுக் கொண்டு சுற்றிச் சுழன்று தடுமாறிக் கொண்டு சென்றது.

வெள்ளத்தின் ஆழம் அதிகமில்லாத மேட்டுப்பாங்கான இடங்களில் சில போது





சென்றது. அது மரங்களின் அடியில் வெள்ளம் எவ்வளவு தூரம் ஏறியிருக்கிறது என்பதைப் பார்த்ததும், ஆங்காங்கு காவேரிக்கரை ஓரமிருந்த மண்டபங்கள் எவ்வளவு தூரம் முழுகியிருக்கிறது என்பதைப் பார்த்ததும் தெரிந்தது. மேட்டுப் பாங்கான இடங்களில் கீழே இறங்கலாமா என்று வானதி யோசிப்பதற்குள் ஆழமான இடங்களுக்குச் சுழல்கள் இழுத்துப் போய் விட்டன.

இறங்குவதற்கும் வானதிக்கு அவ்வளவாக மனம் இல்லை. ஏனெனில், பொன்னி நதியின் அவ் வெள்ளம் அவளைப் பொன்னியின் செல்வர் இருக்குமிடத்துக்கு அழைத்துச் செல்வதாக அவளுடைய மனத்தில் ஒரு தோற்றம் ஏற்பட்டிருந்தது. இளவரசருக்கு ஏற்படப் போகும் அபாயத்தைப் பழுவேட்டரையர் மூடுமந்திரமாகக் கூறியது அவள் உள்ளத்திலும் பதிந்திருந்தது. அவரை அந்த அபாயத்திலிருந்து பாதுகாக்கவே காவேரி நதி தன்னை அழைத்துப் போவதாக அவள் எண்ணிக் கொண்டாள்.

ஆகா! அந்தப் பூங்குழலிக்குத்தான் எவ்வளவு கர்வம்? இளவரசர் விஷயத்தில் எவ்வளவு உரிமை கொண்டாடுகிறாள்? ஆயினும், அவ்வாறு உரிமை கொண்டாடுவதற்குக் காரணம் உண்டு. இன்று இளவரசர் பிழைத்திருப்பதே பூங்குழலியினால் தானே? ஒருநாளும் இல்லை! — அந்தக் குடந்தை ஜோதிடர் கூறியதைத்தான் வானதி கேட்டிருந்தாளே! இளவரசர் பிறந்த வேளை அப்படி! அவருக்கு இம் மாதிரி கண்டங்கள் பல வரக்கூடும்! ஆனால் அவர் உயிருக்கு ஒன்றும் ஆபத்து வராது! உலகத்தை ஆளப்பிறந்தவரைக் கேவலம் கடலும் புயலும் நதி வெள்ளமும் என்ன செய்து விடும்? அவர் அவ்விதம் உயிர் தப்புவதற்கு யாரேனும் ஒரு வியாஜமாக வேண்டும்! பூங்குழலிக்கு அத்தகைய பாக்கியம் கிடைத்திருக்கிறது! அதற்காக அவள் உரிமை எப்படிக் கொண்டாடலாம்? எனினும், அம்மாதிரி பாக்கியம் தனக்கும் ஒரு தடவை கிட்டக் கூடாதா என்ற ஏக்கம் வானதியின் இதய அந்தரங்கத்தில் நீண்ட காலமாக இருந்து கொண்டிருந்தது.

சில சமயம் கூரை சுழன்று திரும்பிய போது, பின்னால் வெகு தூரத்தில் படகு ஒன்று வருவதை வானதி பார்த்தாள். அதில் பெண் ஒருத்தியும், புருஷன் ஒருவரும் இருப்பதும் தெரிந்தது. யார் என்று நன்றாய்த் தெரியவில்லை. பெண் படகு செலுத்தியதைப் பார்த்ததும் அவள் ஒருவேளை பூங்குழலியாயிருக்கலாம் என்று தோன்றியது. தன்னை வெள்ளத்திலிருந்து காப்பாற்றத்தான் வருகிறாளா? இளையபிராட்டி அனுப்பி வைத்திருக்கிறாரா? போதும், போதும்! அவளுக்கு இளவரசர் கடமைப் பட்டிருப்பதே போதும். தானும் வேறு நன்றிக்கடன் பட வேண்டாம்! கூடவே கூடாது. தான் அவளால் இந்த வெள்ளத்திலிருந்து காப்பாற்றப்படுதலே கூடாது.

சிலசமயம் படகு அவளுக்கு அருகில் நெருங்கி வந்து விட்டது போலிருந்தது. சில சமயம் கூரை வேகமாகச் சென்று படகை வெகுதூரம் பின்னால் விட்டு விட்டுச் சென்றது.

இவ்விதம் படகு கண்ணுக்கு மறைந்திருந்த ஒரு சமயத்தில், வீட்டுக் கூரை திசை திரும்பித் தெற்கு நோக்கிச் செல்லுவது போலத் தோன்றியது. இவ்வாறு வெகு தூரம் போயிற்று. காவேரியின் தென் கரையைத் தாண்டி, தெற்கே ஒரே சமுத்திரம் போலத் தோன்றிய வெள்ளப் பிரதேசத்தில் சென்றது. கடைசியில், அந்தத் தண்ணீர் வெள்ளத்தின் எல்லை கண்ணுக்குப் புலப்பட்டது. ஆகா! இது ஒரு நதியின் கரை போல அல்லவாக காணப்படுகிறது. ஆம், ஆம்! இது அரசலாற்றங்கரைதான்! காவேரி உடைப்பு வெள்ளம் நடுவில் பல பிரதேசங்களை முழுக அடித்துக் கொண்டு வந்து இந்த ஆற்றில் விழுந்து கலந்திருக்கிறது. இதன் தென் கரை சிறிது மேடாக இருப்பதால் அதற்குள் அடங்கிச் செல்லுகிறது. அந்த நதிக் கரை, அதன் மரங்களடர்ந்த தோற்றம், அவளுக்குப் பழக்கப்பட்ட இடமாகத் தோன்றியது. பூர்வ ஜன்ம வாசனையைப் போல் ஞாபகம் வந்தது. இல்லை, இல்லை! இந்த ஜன்மத்தில் இரண்டு மூன்று தடவை பார்த்த இடந்தான்! அவள் திருநல்லம் என்னும் க்ஷேத்திரத்தை நெருங்கி வந்து கொண்டிருக்க வேண்டும். அங்குள்ள ஆலயத்தை மழவரையர் மகளார், செம்பியன் மாதேவி, தம் அருமைக் கணவரான கண்டராதித்த சோழரின் ஞாபகமாகக் கருங்கல் திருப்பணியாகச் செய்ய ஆவல் கொண்டிருக்கிறார். அங்கே நதிக் கரையில் சோழ குலத்தார்கள் தங்குவதற்கு வசந்த மாளிகை ஒன்றும் இருக்கிறது. செம்பியன் மாதேவி ஒரு சமயம் இளையபிராட்டியை அவ்விடத்துக்கு அழைத்துச் செல்ல, அவருடன் தானும் போனதுண்டு! அந்த வஸந்த மாளிகையையொட்டியிருந்த தோட்டங்களிலே சென்று பறவைகளின் இனிய கீதங்களைக் கேட்பதில் தனக்கு எவ்வளவு ஆர்வமிருந்தது. ஆகா! அப்போது அங்கு நடந்த ஒரு சம்பவம், வானதியின் உள்ளத்தில் என்றும் மறக்க முடியாதபடி ஆழ்ந்து பதிந்திருந்தது.

(தொடரும்)

உலகப் புகழ் பெற்ற ஓவியரான எம். எஃப். ஹுசைனின் ஓவியக் கண்காட்சி சென்னையில் நடைபெற்றது. அதில் இடம் பெற்ற ஓவியம் ஒன்றைக் காட்டி, "இந்தப் படம் என்னவென்று உங்களுக்குப் புரிகிறதா?" என்று கேட்டோம். 'மாடர்ன் ஆர்ட்' பற்றி ஒன்றுமே தெரியாத ஜி. ரேவதி சொல்கிறார்:

"எம்.எஃப். ஹுசைன் பற்றிப் பத்திரிகைகளில் படித்ததுண்டு. அவருடைய இந்தப் படத்தில், அது சிங்கமா, சிறுத்தையா, புலியா சரியாய்த் தெரியவில்லை. கூட ஒரு ஆள். வேட்டைக்காரன் படமா...? உற்றுப் பார்த்தால், கையில் ஈட்டி போல ஏதோ ஒன்றை வைத்துக் கொண்டு... ஓ! அது ஒரு பெண்! அந்த மிருகத்தின் உடம்பில் வரிகள் போல இருப்பதால் அது புலியாய்த்தான் இருக்க வேண்டும். ஆக.. புலி வேட்டையாடும் பெண்... 'புதுமைப் பெண்' என்ற தலைப்பில் வரையப்பட்ட படமா? இந்தப் படமாவது பரவாயில்லை.. கொஞ்சம் புரிகிறது. சில நவீன பாணி ஓவியங்களில், வண்ணங்களைக் கன்னாபின்னாவென்று வாரி இறைத்திருப்பார்களேயொழிய ஒன்றுமே புரியாது!"





ஜி. ரேவதி

# "வழக்கத்திலிருந்து மாறுபட்டால் மாடர்ன் ஆர்ட்!"

**இதே படத்தை நவீன பாணி ஓவியரான அச்சுதன் கூடலூரிடம் காண்பித்து, அவரது கருத்தைக் கேட்ட போது, கூறினார்:**

"வழக்கத்திலிருந்து மாறுபட்டிருப்பதால்தான் அது மாடர்ன் ஆர்ட். அதில், தீட்டப்படும் உருவத்தை விட, அதை வரைந்த ஓவியரின் சுதந்திரமான சிந்தனையையும் ஒரிஜினாலிடியையும்தான் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். எம்.எஃப். ஹுசைனைப் பொறுத்தவரை, அவர் ரொம்ப 'அப்ஸ்டிராக்ட்' ஆக வரைவதில்லை." என்னைச் சுற்றி உயிரோட்டமான பல நிறைந்திருக்கும் போது, "நான் அவைகளைத்தான் வரைவேன். அப்ஸ்டிராக்டிற்கு ஏன் போக வேண்டும்?" என்பது அவர் கொள்கை. சாதாரணமாய் நாம் பார்ப்பதையே, "அவர், அவருடைய பிரத்தியேகக் கண்ணோட்டத்தில் பார்த்துத் தமக்கே உரிய ஸ்டைலில் வரைகிறார். அதே போலத்தான் இந்த ஓவியமும். இது நவீன பாணியில் வரையப்பட்ட துர்க்கை.



அச்சுதன் கூடலூர்

தொகுப்பு: மௌஷ்மி.

# டெலிபோன் விந்தைகள்!

**2**

ஒரு காலத்தில் டெலிபோன் என்பது ஒரு காதைப் பொத்திக் கொண்டு, தொண்டை நரம்பு புடைக்க, இரைந்து பேசிக் கொண்டிருந்த சாதனமாக இருந்தது. (இன்னும் அப்படித்தான் என்று பலர் சொல்வது அத்தனை நிஜமல்ல) சாதாரண பேச்சுத் தொடர்புச் சாதனமாக இருந்தது. இன்று மேலைநாடுகளில் புது வசதிகளைத் தரும் ப்ளாஸ்டிக் விந்தையாகி விட்டது. இன்றைய டெக்னாலஜியில் டெலிபோனில் என்னவெல்லாம் சாத்தியம் என்று பார்த்து விட்டு, அடுத்த நூற்றாண்டுக்குப் போவோம்.



இவ்வருட ஆரம்பத்தில் அமெரிக்காவில் லாஸ்வெகாஸ், அட்லாண்டா இரண்டு இடங்களில் பொருட்காட்சிகளில் E.I.A. (Engineering Industries Association) என்னும் அமெரிக்க நிறுவனம் நிகழ்த்திக் காட்டிய காட்சிகள் எதிர்கால முன்னோடிகளாக இருந்தன.

ஒரு வீட்டின் மின் இணைப்புக்கள், மின் சாதனங்கள் அனைத்தையும் ஒரு டெலிபோன் மூலம் இயக்கிக் காட்டினார்கள். சமையலறையில் இருந்த டெலிபோனுக்கு வெளியூரிலிருந்து டயல் செய்து, 'நான் எட்டு மணிக்கு வருகிறேன். வாசல் விளக்கைப் போட்டு, கார் ஷெட்டைத் திறந்து வை. காப்பி போட்டு வை' என்று ஆணை கொடுத்துச் செயல்படுத்திக் காட்டினார்கள்.

மற்றொருகாட்சியில், படுக்கை அருகே இருக்கும் போனில் டயல் செய்து, டீ. வி. யைப் போடலாம்; போட்டு அதன் சப்தத்தையும் படத்தையும் சீர்ப்படுத்தலாம்; ஹாலில் இருக்கும் வி ஸி ஆரில் டேப்பைப் போட்டு, அது படுக்கை அறை டீ. வி. யில் தெரியும்படி செய்யலாம். எல்லாம் படுக்கையை விட்டு நகராமல், டெலிபோன் மூலம்!

நவீன டெலிபோனில் இவ்வாறு எத்தனையோ சோம்பேறி வசதிகள் வந்திருக்கின்றன. இந்தியாவிலேயே நீங்கள் நகரங்களில், சுமாரான நட்சத்திர ஓட்டல்களில் தங்கியிருந்தால் இந்த வசதிகளை அறிய வாய்ப்புப் பெற்றிருப்பீர்கள். உதாரணத்துக்கு அதிகாலையில் உங்களை எழுப்ப யாரையும் கெஞ்ச வேண்டாம். அறையில் உள்ள போனில் ஒரு தனிப்பட்ட நம்பரைச் சுழற்றி, எழுப்ப வேண்டிய சமயத்தையும் தொடர்ந்து சுழற்றினால், போன் தானாகவே குறிப்பிட்ட சமயம் மணியடித்து எழுப்பும். (நான் எப்போதும் அறையைக் காலி பண்ணும் போது, ராத்திரி மூன்று மணிக்கு செட் பண்ணிவிட்டுத்தான் புறப்படுவேன்!)

மூன்று நான்கு பேர் ஒரே சமயத்தில் கூட்டியாக மாநாடு பேச 'கான்பரன்ஸ்' வசதி... ஒரு டெலிபோனிலிருந்து மற்றொரு டெலிபோனுக்குச் சென்றால் கொஞ்ச நேரம் முன்னதுக்கு வரும் கால்களைப் பின்னதுக்குத் தானாகவே திசை திருப்பும் **follow me** வசதி. இப்படிப் பலதரப்பட்ட வசதிகள், இன்றே நம் நாட்டிலேயே வந்து விட்டன.

டெலிபோன் கம்பிகளில் தற்காலத்தில் பேச்சை மட்டும் அனுப்புவதில்லை. பேச்சுடன் கம்ப்யூட்டர் செய்திகள், எலக்ட்ரிக் பில், வாட்டர் பில் விவரங்கள் எல்லாவற்



றையும் கலந்தும் அனுப்பிப் பிரிக்க முடியும். இந்தப் புதிய வசதி ISDN (Integrated Services Digital Network) என்று பெயர் படைத்தது. ஒருமித்த சாதனங்களுடன் டிஜிட்டல் இணைப்புப் பின்னல். எதிர்காலச் சூட்சுமங்கள் அனைத்தும் இதில் தான் அடக்கம். இது என்ன என்று தெரிந்து கொள்ளுமுன், இரண்டு வார்த்தைகள் நீங்கள் அறிய வேண்டும்.

அனலாக், டிஜிட்டல். கொஞ்சம் கவனமாகப் படியுங்கள். இந்த டிஜிட்டல் என்கிற மந்திர வார்த்தை புரிந்துவிட்டால் இந்த இயலின் அத்தனை விசித்திரங்களும் பிடிபட்டுவிடும். டிஜிட்டல் புரிய அனலாக் புரிய வேண்டும்.

அனலாக் என்பது தொடர்ந்து வருவது. டிஜிட்டல் என்பது தனித்தனியானது... ஸ்ரீதேவியின் படம் அனலாக். அவர் பரிமாணங்களை 36 24 36 என எண்களாகச் சொல்வது டிஜிட்டல்!




* மேலுள்ள படத்தில் குறிப்பிட்ட ஒரு வரியின் வெளிச்ச வித்தியாசங்களின் 'அனலாக்' வடிவம்.

இந்தப் படத்தைப் பாருங்கள். இதைச் சென்னையிலிருக்கும் நீங்கள் டில்லியில் இருக்கும் நண்பனுக்கு அனுப்ப விரும்புகிறீர்கள். எப்படி அனுப்பலாம்? சுலபமாக ஒரு கவருக்குள் போட்டு, ஸ்டாம்பு ஒட்டி, விலாசம் எழுதி அனுப்பலாம். இரண்டு நாட்களில் போய்ச் சேர்ந்து விடும். ஆனால் உடனே அனுப்ப வேண்டும்; மின் வேகத்தில் அனுப்ப வேண்டும் என்றால் என்ன செய்ய வேண்டும்? மின் கம்பிகளைப் பயன்படுத்தலாம். ஆனால் மின் கம்பிகளில் காகிதத்தை அனுப்ப இயலாது. அதனால் இந்தப் படத்தின் செய்தியை எப்படியோ மின்சார மாறுதல்களாக மாற்ற முடிந்தால் அனுப்ப இயலும். அது எப்படி?

படத்தைக் கூர்ந்து கவனியுங்கள். படத்தைப் பகுதி பகுதியாகப் பிரிக்கலாம். மேல் இடது முனையிலிருந்து கீழ் வலது முனை வரை கோடு கோடாக அதைவருடலாம். (கண்களால்தான்). அப்படி வருடும் போது இந்தப் படம் என்கிறது ஆஃப்டர் ஆல்... முழுவதுமே வெளிச்ச வித்தியாசங்கள், பிரகாசத் தராதரங்கள்தாம். தலைமயிர் கறுப்பாக இருக்கிறது. நெற்றி வெளுப்பாக இருக்கிறது. உதடுகள் நடுவாந்தரம். இப்படிப் படத்தின் ஒவ்வொரு பகுதியும் கறுப்பு வெள்ளைகளுக்கு இடையில் உள்ள பற்பல 'வெளிச்ச எண்ணிக்கை'கள்தான். 'க்ரே வால்யூஸ்' என்று சொல்வார்கள்.

கறுப்பு என்பதற்கு 0, வெள்ளை என்பதற்கு 15 என்று எண்ணிக்கை கொடுத்தால், இந்தப் படத்தை ஒவ்வொரு பகுதியையும் ஓர் எண்ணால் குறிப்பிடலாம். உதாரணத்துக்குப் படத்தின் ஒரு பகுதி 1 1 1 1 2 2 2 3 3 3 8 8 8 9 9 9 6 6 6 0 0 0 3 3 4 4 என்று குறித்தால், ஆரம்பத்தில் கறுப்பாகவும், கொஞ்சம் கொஞ்சமாக வெளுத்து, ஒன்பது வரை போய் அங்கே மறுபடி ஓர் இடம் கறுப்பாக இருப்பதால் 0 0 வந்து... இப்படி ஒரு படத்தின் வெளிச்ச வித்தியாசங்களை எண்களாகக் குறிப்பிட முடியும். இப்படி எண்களாகக் குறிப்பிடுவதால் என்ன லாபம்? எண்களுக்கு ஈடாக மின்சார அளவை மாற்ற முடியும். 1 என்றால் ஒரு வோல்ட். 2 என்றால் இரண்டு வோல்ட். இப்படி மாற்றி, அந்த முகத்துக்கு ஈடான மின் அளவைத் தராதரங்களை ஒரு கம்பியின் மூலம் செலுத்த முடியும்.

படத்துக்குப் பதிலாக வோல்டேஜ். இதுதான் 'அனலாக்.' அனலாக் என்றால் 'ஈடான' என்று அர்த்தம். அந்த முகத்தின் பிரகாசத் தராதரங்களுக்கு ஈடான மின் மாறுதல்களை அனுப்புகிறோம். இது அனலாக். இப்படி மாற்றப்பட்ட மின்சாரத்தைக் கம்பிகளில் செலுத்தி, மறுமுனையில் இந்தச் செய்தியைக் குறித்துக் கொண்டு 0 வோல்ட் என்றால் கறுப்பு. 15 என்றால் முழு வெளுப்பு. மற்ற எண்ணிக்கைகள் நடுவாந்தர வெளிச்சக் கலப்புக்கள் என்று ஒரு சித்திரக்காரரை மீண்டும் வரையச் சொல்லி விட்டால் அந்தப் படத்தைக் கம்பி மூலமாக அனுப்பி விட்டோம்!

எத்தனையோ வேலையில்லாப் பட்டதாரிகள் இருந்தாலும் இவ்வாறு குறித்து வைத்துக் கொண்டு படமாக மாற்ற ஆசாமிகளைப் பயன்படுத்துவதில்லை. இதற்கெல்லாம்

சுஜாதா

மின்சாரச் சாதனங்கள் இருக்கின்றன. ஸ்கானர், ப்ரிண்டர் என்று. மேற்சொன்னது அனலாக் என்கிற சித்தாந்தத்தை விளக்க ஓர் எளிய உதாரணம். அனலாக் புரிந்து விட்டால் டிஜிட்டல் சுலபம். கொஞ்சம் போரடிக்கிறது போல இருப்பதால் ஒரு ராஜா கதை சொல்கிறேனே!

ஐந்தாம் மாடுல வர்மன் என்கிற ராஜா ஒரு தேசத்தை ஆண்டு வந்தான். அவனுக்குத் தன்னை மிஞ்சித் தன் தேசத்தில் எதும் யாரும் இருக்கக்கூடாது என்கிற எண்ணம். அதனால் அவன் நாட்டில் ஆணை பிறப்பித்தான். 'இனிமேல் இந்த நாட்டில் 5 — க்கு மேல் எண்களே கிடையாது. எல்லாக் கணக்கு சமாசாரங்களிலும் ஐந்து வரை உள்ள இலக்கங்களே, பயன்படுத்த வேண்டும். 6 7 8 9 எல்லாம் கிடையாது' என்று சொல்லி விட்டான்.

இந்த நாட்டில் பள்ளிக்கூடங்களில் 1 2 3 4 5 வரை சொல்லிக் கொடுத்துவிட்டு, அதன் பின் 10 11 12 13 14 15. அப்புறம் 20 21. இப்படிக் கணக்குப் போடாமல் இல்லை. என்ன கொஞ்சம் இலக்கங்களைக் குறைத்து வைத்துக் கணக்குப் போட்டார்கள். நம் நாட்டு 6 என்பது அவர்கள் நாட்டுக்கு 10. நம் நாட்டு 12 அவர்கள் நாட்டில் 20 (ஒரு கேள்வி. நம் நாட்டில் 67 என்பது அவர்கள் நாட்டில் என்ன?) ஏதோ சமாளித்து விட்டார்கள்.

இந்த ராஜாவாவது பரவாயில்லை. அவன் தங்கை அண்டை நாட்டு அரசி. அவள் பட்டம் முதலாம் பைனரி தேவி. அவளும் தன்னை மிஞ்சி யாருமே இருக்கக்கூடாது என்று 'என் நாட்டில் இரண்டே இலக்கங்களுக்குத்தான் அனுமதி. 0 1 இதில் எல்லாக் கணக்குகளையும் போட்டுக் கொள்ளுங்கள்' என்று ஆணை பிறப்பித்து விட்டாள்!

இந்த நாட்டில் கணக்குப் போடுவது சாத்தியமா? யோசித்துப் பாருங்கள்!

சாத்தியம்தான். என்ன அதிகப்படியாக இலக்க ஸ்தானங்கள் கொடுக்க வேண்டும். இந்த நாட்டுப் பள்ளிகளில் எண் வரிசை.

0
1
10
11
100
101
110
111
1000
1001

என்றே போகும்.

நம்நாட்டில் 1 என்பது அவர்கள் நாட்டிலும் 1 தான். ஆனால், நம் நாட்டு 2 அவர் கள் நாட்டில் 10. இவ்வாறு இரண்டு இலக்கங்களை மட்டும் வைத்துக் கொண்டு எந்த எண்ணும் அமைக்க முடியும்.

இந்த பைனரி தேவியின் ராஜ்யம் பைத்தியக்கார ராஜ்யம் என்று எண்ணாதீர்கள். டிஜிட்டல் கம்ப்யூட்டர்களின் நவீன கம்யூனிகேஷனின் ஆதார எண் அமைப்பு, இந்த 'பைனரி' இரு இலக்கங்கள் மட்டுதான்.

அதைப் பற்றி அடுத்த வாரம் பார்க்கு முன் ஒரு கேள்வி... கல்கி அலுவலகம் வந்து சேரும் முதல் சரியான பதிலுக்குப் பரிசு. நம் நாட்டில் 167 என்பது பைனரி நாட்டில் எப்படி?

---

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — 1989

பரிசு பெற்ற கதைகள் தவிர, பிரசுரத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள்:

1. "கோடைக்கால மேகங்கள்" — வே. சாந்தி (அறிமுக எழுத்தாளர்).
2. "கல்லார் கண்பட்ட இரு" — வாலறிவன் (டி. இளங்கோ — அறிமுக எழுத்தாளர்)
3. "சிவப்பு நாடா" — மீனாதாஸ்.
4. "பெண்மை" — ஜி. ஏ. பிரபா
5. "என்ன செய்ய முடியும்?" — கோ (எஸ். கோவிந்தராஜன் — அறிமுக எழுத்தாளர்)
6. "புதிய பார்வை" — கே. பி. ஜனார்த்தனன்.
7. "நடிக்கிறார்கள்" — கா. க. வேலாயுதன்.
8. "ஞானம் மாமி" — ஜயலக்ஷ்மி.
9. "பேசும் பொம்மைகள்" — வினோதானந்த் (தே. லட்சுமி நரசிம்மன்)
10. "கோர்பசேவ் தலையில்" — ஷ்யாமா (சு. கணபதி ஸுப்ரமணியன் — அறிமுக எழுத்தாளர்)
11. "நிழல் தரும் மரங்கள்" — சலாஹ் (எம். எம். சலாஹுதீன்)
12. "மின்மினியிடம்கையேந்தும்மின்னல்கள்" — தங்க சிவராசன்.
13. "ஒரு கனவின் நிழல்" — ஜி.எச்.எஸ். மணியன்.
14. "கடமை, கண்ணியம், கட்டுப்பாடு" — ஹெச். ஆல்பர்ட் இக்னேஷியஸ் (அறிமுக எழுத்தாளர்)
15. "மீன்கள்" — தபசி (தே. சங்கர்)
16. "பெற்றவர்கள்" — க. நாகராசன்




**ஹி**க்கின்பாதம்ஸ்:
லேண்ட்மார்க் —
சென்னையிலுள்ள இந்த இரண்டு பிரம்மாண்டான புத்தக விற்பனை நிறுவனங்களிலும் நுழைந்து, "உங்களிடம் இருக்கும் புத்தகங்களிலேயே மிக விலை உயர்ந்தது எது?" என்று விசாரித்தோம்.

'லேண்ட்மார்க்'கில் உமெய்துவும், சுதர்சன ரெட்டியும் பிரம்மாண்டமான புத்தகம் ஒன்றைத் தூக்கிக்கொண்டு வந்தார்கள்.

"விலை?"

"2764 ரூபாய் 50 பைசா." (அம்மாடி!)

தலைப்பு: சீக்ரெட் விஷன்ஸ் அஃப் த ஃபிஃப்த் தலாய் லாமா. ஆசிரியர் (எளிதில்

# அம்மாடியோவ் விலையில் இரண்டு புத்தகங்கள்!

நம் வாயில் நுழையாத பெயர்): சாம்டென் கெய்ல்ஸ்டன் கார்மே. வெளியீட்டாளர்: செரிண்டியா பப்ளிகேஷன்ஸ், லண்டன்.

புனித பதினான்காவது தலாய் லாமா முன்னுரை எழுதியிருக்கிறார். பிறகு முகவுரை: அறிமுகம். அப்புறம்தான் விஷயம்.

ஐந்தாவது தலாய் லாமா கவாங் லோப்பாங் கயாம்ட்சோ, 1617 முதல் 1682 வரை வாழ்ந்தவர். அவருடைய தீர்க்க தரிசனத்தை அடிப்படையாகக் கொண்டது இந்நூல். உலகிலேயே முதன் முதலாகப் படங்களும் வரைந்து எழுதப்பட்ட ரகசிய சுயசரிதை இதுதான்.

இதுவரை திபேத்தியரிடமிருந்தும், பிறரிடமிருந்தும் மறைக்கப்பட்ட இந்த நூல், காணக் கிடைக்காத அற்புதமான ஆவணம் என்று சமீபத்தில்தான் கண்டு கொள்ளப்பட்டிருக்கிறது.

வண்ணப்படங்கள் எல்லாமே திபேத்தியச் சடங்குகளின் நோக்கங்களை வலியுறுத்துகின்றன. பக்கம் பக்கமாக வண்ணத் தாள்களில் திபேத்திய எழுத்துக்கள்!

இப்புத்தகத்தை யாரும் இதுவரை வாங்கவில்லை.

**ஹி**க்கின்பாதம்ஸில் மிக விலை உயர்ந்த புத்தகம் எது என்று விசாரித்தோம். விற்பனைப் பிரிவு அதிகாரி சீனிவாசன் சொன்னார்:

**'Roofs & Roofings — New Materials'** என்ற நூல்தான் அதிக விலை. ரூபாய்: 1628.00. ஆசிரியர்: மே.

கூரை பற்றி, உலகம் முழுக்க அறிவியல் — தொழில் நுட்ப முறைகள் பலவற்றின் அடிப்படையிலான கட்டுரைகள்; புதுப் புது டிசைன்கள்.

அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், ஜெர்மனி, ஜப்பான் ஆகிய நாடுகளின் ஸ்பெஷலிஸ்ட்டுகள், மற்றும் உலகப் புகழ் பெற்ற ஆராய்ச்சியாளர்கள், தயாரிப்பு, டிசைன், காண்ட்ராக்ட், பாதுகாப்பு முறைகள் பற்றி விவரமாகச் சர்வே செய்து எழுதிய சுவாரசியமான கட்டுரைகள்.

கூரைகளும் நெருப்பும்; தண்ணீர் பாதிக்காத கூரை; பழங்கால சீனக் கூரைத் தொழில் நுட்பம் முதலிய பகுதிகள் சாதாரண வாசகரைவிட, அரசுக்கு இன்னும் பயனுள்ளதாக இருக்கும்.

இப்புத்தகம் இதுவரை ஐந்து பிரதிகள் விற்பனை ஆகியிருக்கின்றன!

— சித்தார்த்.

புகைப்படங்கள்: யோகா.



# கொடியேற்றம்

பியூன் சாம்பசிவம் சொன்ன விஷயம் சேதுராமனை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

"நான் இந்த ஆபீஸுக்கு வந்து ஏழு வருஷமாகுது சார். இதுவரைக்கும் குடியரசு தினம், சுதந்திர தினமெல்லாம் கொண்டாடினதே இல்லை சார்..."

"அப்படியா? வேடிக்கையா இருக்கே...!"

"ஸ்டாஃப் யாருக்குமே அதிலே ஆர்வம் இருக்கிறதாத் தெரியலை சார். லீவு கிடைக்குதுங்கிற சந்தோஷத்திலே வீட்டிலே ஒன்பது மணி வரைக்கும் தூங்குவாங்க. சொந்த வேலை பார்ப்பாங்க. உங்களுக்கு முன்னாலே இங்கே இருந்த மானேஜரோ அதுக்கு மேலே! அவரு மெட்ராஸ்காரர். எப்படா லீவு வரும்னு தவிப்பார். சுதந்திரமாவது, குடியரசாவது? முதல் நாள் சாயந்திரமே மெட்ராஸ் பஸ் ஏறிடுவார்..."

— அந்தச் சிறிய கிராமத்திலிருந்த கிளை அலுவலகத்திற்கு அவர் மானேஜராக வந்து சேர்ந்து ஒரு மாதம்தான் ஆகியிருந்தது. கிராமத்தின் செயற்கை பூசப்படாத வனப்பிலே மயங்கி, குளிர்ந்து போயிருந்த அவரது மனம், இச் செய்தியைக் கேட்டதும் கொஞ்சமாகக் கொதிக்க ஆரம்பித்து விட்டது.

ஹெட்கிளார்க்கைக் கூப்பிட்டனுப்பினார்.

"நாளைக்கு என்னன்னு ஞாபகமிருக்கா சார்?"

"இன்டிப்பெண்டன்ஸ் டே. விடுமுறை நாள். நல்லா நினைவிருக்கு சார்..." — ஹெட்கிளார்க்கின் சந்தோஷம் குரலிலும், முகத்திலும் வெளிப்படையாகத் தெரிந்தது.

"வெரிகுட்! உடனே ஒண்ணு செய்யுங்க. ஒரு சர்க்குலர் டைப் பண்ணுங்க. நாளைக்குக் காலையிலே சரியா எட்டு மணிக்கு நம்ம ஆபீஸ் வாசலிலே கொடியேற்றிச் சுதந்திர தினத்தைக் கொண்டாட இருக்கிறோம். எல்லா அலுவலர்களும் தவறாமல் வந்து கலந்துக்கணும்னு சர்க்குலர் அனுப்பிடுங்க. தேசியக் கொடி, ஸ்வீட்ஸ் இன்னும் என்னென்ன தேவையோ, பார்த்து வாங்கிடுங்க..."

"சார்... நம்ம ஆபீஸிலே கொடிக் கம்பமே இல்லை சார்..."

"அதனாலென்ன? ஒரு நல்ல மூங்கிலா வாங்கிட்டு வந்து நட்டுட்டாப் போச்சு...!"

"அது வந்து சார்... நம்ம ஆபீஸிலே இப்படிக் கொண்டாடுறது வழக்கமே இல்லை சார்... கொண்டாடினாலும் ஒருத்தரும் வரமாட்டாங்க சார்..."

"வழக்கமில்லேன்னு நீங்க சொல்றீங்க. ஆனா போன வருஷத்து கன்டிஜென்சி அக்கவுண்டைப் பார்த்தா, 'சுதந்திர தினக் கொண்டாட்டச் செலவு இருநூறு ரூபா'ன்னு இருக்கே சார்...?"

"அது... அது வந்து... பழைய மானேஜர்..." — ஹெட்கிளார்க் பதில் சொல்லத் தடுமாறினார்.

"இங்கே பாருங்க... எது எப்படியிருந்தாலும் நாளைக்கு நம்ம ஆபீஸிலே சுதந்திர தின விழா கொண்டாடுறோம். நீங்க சர்க்குலர் டைப் பண்ணுங்க. அதிலேயே இன்று மதியம் மூணு மணிக்கு ஸ்டாஃப் மீட்டிங் இருக்குன்னு அடிச்சுடுங்க. அந்த மீட்டிங்கிலே நான் எல்லோருக்கும் விஷயத்தை எடுத்துச் சொல்றேன்."

சேதுராமன் முடிவாகச் சொல்லி விட, வேறு வழியின்றித் தலையை ஆட்டியவாறே வெளியே போனார் ஹெட்கிளார்க்.

மதியம் கூட்டப்பட்ட கூட்டத்தில் மானேஜரின் குரலுக்கு நிறையவே எதிர்ப்புக் கிளம்பியது.

"சுதந்திரம் வாங்கி என்னத்தை சார் சாதிச்சுட்டோம்? பெரிசாக் கொண்டாடுறதுக்கு...?" என்று அங்கலாய்த்துக் கொண்டாள் டைப்பிஸ்ட் சுதந்திராதேவி!

"ஒரு நாள் லீவு கிடைக்குது. அந்த சந்தோஷத்தையும் இழக்கச் சொல்றீங்களா சார்... காலையில் ஆபீஸ் வந்துட்டாலே லீவு மாதிரியே இருக்காது சார்...!"

"நாலைஞ்சு வருஷமா இல்லாம, இப்ப ஏன் சார் திடீர்னு ஒரு புதுப் பழக்கம்...?"

"நாங்க மொத்தம் ஆறு பேர் வெளியூரில் இருந்து வர்றோம் சார். நாளைக்கு இதுக்காக ஆபீஸ் வந்துட்டுப் போறதுன்னா அநாவசியமாப் பதினைஞ்சு ரூபா செலவாகும் சார்... ஏன் சார் வெட்டிச் செலவு?"

— ஒவ்வொருவரும் ஒவ்வொரு

ராஜ்கோகுல்

காரணத்தைச் சொன்னார்கள். ஸ்டாஃப் அசோசியேஷன் வலுவாக இருந்ததால், எல்லோருமே தங்கள் கருத்துக்களைத் தைரியமாக எடுத்துச் சொன்னார்கள்.

சேதுராமனுக்குச் சிரிப்புத்தான் வந்தது. இந்த அளவுக்குச் சங்கம் அமைக்கவும், சுதந்திரமாகப் பேசவும் முடிவதே, நம் நாடு பெற்ற சுதந்திரத்தால்தான் என்பதை இவர்கள் ஏன் புரிந்து கொள்ளவில்லை என்று நினைத்து அவர் ஆச்சரியப்பட்டார். கூடவே கொஞ்சம் கோபமும் வரத்தான் செய்தது. கோபப்பட்டு ஏதாவது வார்த்தைகளை விட்டு விட்டால் காரியம் கெட்டு விடும் என்பதால், கொஞ்சம் 'அடக்கியே வாசித்தார்'!

''நண்பர்களே! உங்கள் எண்ணங்களையெல்லாம் நான் புரிந்து கொள்கிறேன். உங்கள் நியாயமான உணர்வுகளை மதிக்கவும் செய்கிறேன். அதே சமயத்தில் என்னுடைய சில உணர்வுகளை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்கிறேன். இந்தியா சுதந்திரம் பெற்ற காரணத்தால்தான், நாமெல்லாம் இவ்வளவு உரிமையோடு கருத்துக்களை வெளிப்படையாகப் பரிமாறிக் கொள்ள முடிகிறது என்பதை நீங்கள் உணர்ந்து இருப்பீர்கள் என்றே நம்புகிறேன்.

''உங்கள் வீட்டில் உங்கள் குழந்தைகளின் பிறந்த நாளை மகிழ்ச்சியாகக் கொண்டாடுவது இல்லையா? இதுவும் அது போல ஒரு மகிழ்ச்சியான நாள்தான். சுதந்திரம் பிறந்த நாள்! கொடியேற்றி இனிப்பு வழங்குவதற்கு மட்டுமல்ல — இந்த நாள். அதற்கு மேலே ஒரு படிபோய், நாமெல்லாம் ஓர் உறுதிமொழி ஏற்க வேண்டிய நாள் இது!''



அறையில் இருந்த அனைவரையும் கவர்ந்து ஈர்க்கும் வகையில் தம் கம்பீரமான குரலில் பேசினார் சேதுராமன்.

"தோழர்களே! நாட்டிலே அக்கிரமங்கள் பெருகி விட்டதாக நாம் அடிக்கடி பேசுகிறோம். வறுமை பெருகிக் கொண்டே போகிறது. ஊழல் விசுவரூபமெடுத்து விட்டது. இன்னும் என்னென்னவோ சொல்லி அங்கலாய்கிறோம். ஆனால் இவற்றையெல்லாம் மாற்றுவதற்கு நாம் ஏதாவது செய்ய வேண்டுமென்று எப்போதாவது நினைக்கிறோமா? ஒருவரை ஒருவர் குற்றம் சொல்லிப் பயனில்லை. ஒவ்வொரு தனிமனிதனும், தன்னையும் தன்னைச் சுற்றியுள்ள சிறு சூழலையும் தூய்மைப்படுத்திக் கொள்ளும் வகையில் ஓர் உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டிய நாள் இது. ஒவ்வொரு தனிமனிதனும் நல்வழியில் பயணத்தைத் துவங்கி விட்டால் சமுதாயம் முன்னேறாமல் போய் விடுமா?"

வாசலில் நின்ற பியூன் சாம்பசிவம் உட்பட எல்லோருமே 'மெஸ்மரைஸ்' செய்யப்பட்டவர்களைப் போல அவருடைய பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

"நான் அறிந்த வரையில் தவறு எங்கே நடந்தாலும், அதனைச் சுட்டிக் காட்டுவேன். அத் தவறுகளைக் களைய என்னால் இயன்ற முயற்சிகளைச் செய்வேன். எப்போதும் என்னுடைய உரிமைகள் அடுத்தவர்களுடைய சுதந்திரத்திற்குள் தலை நீட்டாதபடி நடந்து கொள்வேன்' என்று உறுதி மொழி ஏற்க வேண்டிய நாள் இது! ஆகவே நண்பர்களே, நம்முடைய சிறு சிறு துன்பங்களைப் பொறுத்துக் கொண்டு, நாளை காலை எட்டு மணிக்குக் கூடுகிறோம். நம் அலுவலகத்தில் கொடியேற்றிச் சுதந்திர தின விழாவைக் கொண்டாடுகிறோம். நன்றி. வணக்கம்...!" என்று பேச்சை முடித்து விட்டு, உடனே வெளியேறித் தம் அறைக்குச் சென்று விட்டார் சேதுராமன்.

**அ**டுத்த நாள் காலை எட்டு மணி —

அலுவலக வாசலில் கம்பீரமாக ஒரு மூங்கில் கம்பம் நின்றது. கம்பம் முழுவதும் மூவண்ணக் காகிதங்கள் நேர்த்தியாக ஒட்டப்பட்டிருந்தன. பூக்கள் வைத்துச் சுருட்டப்பட்ட தேசியக் கொடி கம்பத்தில் வைத்துக் கட்டப்பட்டிருந்தது.

மானேஜர் சேதுராமனும், பியூன் சாம்பசிவமும் மட்டும் வாசலில் நின்றிருந்தார்கள்.

ஹெட்கிளார்க்கும், டைப்பிஸ்டும் சற்று நேரத்தில் வந்து சேர்ந்தார்கள்.

"எங்கே சார் ஒருத்தரையும் காணோம்..?" ஹெட்கிளார்க் கேட்டார்.

"வந்துடுவாங்க. கொஞ்சம் வெயிட் பண்ணுவோம். எல்லோரும் வந்ததும் ஆரம்பிப்போம்..." நம்பிக்கையோடு சொன்னார்.

வாசலில் நின்றபடி காத்திருந்தார்கள். நேரம் ஓடிக் கொண்டே இருந்தது. மானேஜர் ஆவலோடு ரோட்டைப் பார்த்த படி நின்றிருக்க, ஹெட்கிளார்க்கும் டைப் பிஸ்டும் ஏதோ முணுமுணுவென்று பேசிச் சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

8.25 ஆகி விட்டது.

"ஓ.கே... நேரமாயிடுச்சு.. லெட் அஸ் ஸ்டார்ட் தி ஃபங்ஷன்..." என்றார் மானே ஜர். அவரது முகம் முழுவதும் ஏமாற்றக் கோடுகள்.

கையோடு கொண்டு வந்திருந்த கேசட் பிளேயரில், தமிழ்த் தாய் வாழ்த்து இசைத்த பின், மானேஜர் கொடியேற்றினார். சாம்ப சிவம் மட்டும் 'சல்யூட்' செய்து கொடி வணக்கம் செய்தான். கொடியை ஏற்றி விட்டு மானேஜரும் 'சல்யூட்' செய்தார். அதுவரை சும்மா வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த மற்ற இருவரும், இவர் களைப் பார்த்துக் கொடி வணக்கம் செய் தார்கள்.

எல்லோரும் வருவார்கள் என்று எதிர் பார்த்து ஏமாந்திருந்த மானேஜர், தேசிய ஒருமைப்பாடு பற்றிச் சில வரிகள் மட்டும் பேசி முடித்துக் கொண்டார்.

அப்போது பார்த்து கரண்ட் நின்று விட, தேசிய கீதத்தை கேஸட் பிளேயரில் போட முடியவில்லை.

"நீ பாடும்மா...." என்றார் டைப்பிஸ் டைப் பார்த்து.

"எனக்குப் பாடத் தெரியாது சார்... ஹெட்கிளார்க் சார் நீங்க பாடுங்களேன்..." என்று அவள் ஒதுங்கினாள்.

"ஊஹூம் எனக்கும் பாட வராது" என்று அவரும் சைடு வாங்கினார்.

"நான் பாடறேன் சார்!" என்று தானே முன் வந்தான் பியூன் சாம்பசிவம். அவனும், மானேஜரும் சேர்ந்து பாடினார் கள். மற்ற இருவரும் இடையிடையே சில வரிகளைப் பாடி, மற்ற சமயங்களில் சும்மா வாயசைத்துக் கொண்டிருந்தார்கள்.

**ம**னச்சோர்வோடு தம் அறையில் வந்து உட்கார்ந்தார் சேதுராமன்.

"நீங்க நேத்து அவ்வளவு விவரமா எடுத் துச் சொல்லியும் அவங்கல்லாம் வரல்லியே சார்? ஹெட்கிளார்க் கூட வேண்டா வெறுப்பாத்தான் வந்திருக்கார் சார். டைப் பிஸ்டுக்கு ப்ரபேஷன் பீரியட் முடியலே. அதனாலே நீங்க ஏதாவது மெமோ குடுத்துடுவீங்கன்னு பயந்துதான் அதுவும் வந்துடுச்சாம் சார். அங்கே ஹெட் கிளார்க் சாருக்கிட்டே சொல்லிக்கிட்டிருக்கு சார்..." சாம்பசிவம் சொன்னான்.

"அப்படியா...?"

"ஆமாம் சார்! எல்லோருக்கும் ஒரு மெமோ அடிச்சு விடுங்க சார்..."

"நோ... நோ... அப்படியெல்லாம் செய்யக் கூடாது சாம்பசிவம். சில விஷயங் களிலே வலுக்கட்டாயமா வற்புறுத்தக் கூடாது. இதையெல்லாம் அடிச்சுக் கனிய வைக்க முடியாது. தானாக் கனியணும். அது சரி? நீ ஏன் இன்னிக்கு வந்தே? நான் திட்டு வேன்னு பயந்தா...?"

"அப்படியெல்லாம் பயந்துகிட்டு வரலே சார். நேத்து நீங்க பேசினதைக் கேட்டு, மனசு விரும்பித்தான் நான் வந்திருக்கேன் சார். நம்ம ஊரிலே தேசியக் கொடி கிடைக்காம, ராத்திரி கடைசி பஸ் ஸிலே டவுனுக்குப் போய்க் கொடியை வாங் கிட்டு, பஸ் ஸ்டாண்டிலேயே படுத்துக் கிடந்துட்டுக் காலையிலே முதல் பஸ்ஸிலே ஓடியாந்தேன் சார். ஆறரை மணிக்கே இங்கே வந்து, மூங்கில் கம்பு பூராவும் வரிசையாப் பச்சை, வெள்ளை, காவி நிறப் பேப்பர்களை ஒட்டி, கம்பை நட்டு வைச் சேன் சார். எல்லாமே ஈடுபாட்டோட செய்திருக்கேன் சார். மனசுக்குச் சந்தோ ஷமா இருக்கு சார். நேத்து சாயந்திரமே, என் பேத்தியைப் பாடச் சொல்லிக் கேட்டு, 'நீராருங் கடலுடுத்த' பாட்டும், 'ஜனகண மன' பாட்டும் கத்துக்கிட்டேன் சார்..."

சேதுராமனின் முகம் மகிழ்ச்சியில் மலர்ந்தது.

"இது போதும் சாம்பசிவம்! நீ ஒரு ஆள் போதும் சாம்பசிவம்! எனக்கு ரொம்ப சந்தோஷமா இருக்கு. என்னோட முயற் சியாலே உன் ஒருத்தனையாவது மனசள விலே மாத்த முடிஞ்சுதே! அதுவே எனக்குப் பெரிய உற்சாகத்தைக் கொடுக்குது... அடுத் தடுத்த வருஷத்திலே எல்லார் மனசையுமே திசை திருப்ப முடியும்னு நினைக்கிறேன்.. நம்பிக்கையோடு பேசிக் கொண்டு போன மானேஜரை, ஆச்சரியத்தோடு பார்த்தான் சாம்பசிவம்.

மனைவி: என்னங்க! நம்ம பையன் பெரியவனா ஆனதுக்கப்புறம் அரசி யல்வாதியா மாறிடுவானோன்னு பயமா இருக்கு!"

கணவன்: ஏன் அப்படியெல்லாம் அனா வசியமாச் சந்தேகப்படறே?

மனைவி: பின்னே, பரீட்சையிலே ஃபெயி லான அவனைப் பார்த்து 'ஏண்டா இப்படிப் பண்ணிட்டியே'ன்னு கேட்ட துக்கு, 'இதெல்லாம் காலத்தின் கட் டளை'ன்னு பதில் சொல்றானே!

— இரா. சம்பத்குமார்.



# உயிர்க் குருவிகள்

கட்டிலில் கிடந்த ராகவானந்தம் மெல்ல சிரமப்பட்டுக் கண்களை விழித்துப் பார்த்த போது, புகைப்படலத்துக்குள் அந்தச் சைக்கிள்தான் முதலில் புலப்பட்டது. சுவர் ஓரமாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்த ஒரு பழைய சைக்கிள், புழுதி படிந்த நிலையில் பரிதாபமாக நின்றது. அந்தச் சைக்கிளையே ராகவானந்தம் கண்களை ஒடுக்கி இமைத்து இமைத்துப் பார்த்தார். அந்த சைக்கிளைப் போலவே அவரும் ஒட்டி ஒடுங்கி உலர்ந்து தளர்ந்து போய்க் கட்டிலில் கிடந்தார். அவரின் பஞ்சடைந்த கண்களில் லேசாகக் கண்ணீர் சுரந்து பளபளப்பாகி அந்த சைக்கிளை மறைத்தது.

"ஏண்டா ரகு, இந்த பாடாவதி சைக்கிளைத் தூக்கிக் காயலாங்கடையிலே போடுடான்னு எத்தனை தரம் சொல்லியிருக்கேன். இன்னும் ஏண்டா இங்கேயே விட்டு வச்சிருக்கே? பார் இவரோட பார்வையும் இவரோட உடம்பும் அந்தப் பக்கமே திரும்பிக் கிடக்கு."

குரல் கேட்டு ஒரு பக்கமாகச் சாய்ந்திருந்த தலையை மெல்ல அசைத்துத் திருப்பினார் ராகவானந்தம். அப்போதுதான் உணர்ந்தார், அவருடைய கட்டிலைச் சுற்றி நிறையப் பேர் நின்று கொண்டிருப்பதை. ஆச்சரியப்பட்டார்... 'அட... இவங்க எல்லாம் எதுக்கு வந்திருக்காங்க.. யாரு யாரு.. இவன் பெரியவன் ராமச்சந்திரன். இவன்தானே சைக்கிளைக் காயலாங்கடைக்குப் போடச் சொன்னது. ம்.. யாரிடம் சொன்னான் ரகுவரனிடமா? ஆமா அதோ ரகு. அடுத்து பெரிய பொண்ணு உமா. எங்கே அவள் புருஷன்...? அடுத்து அடேடே கல்யாணிக்குட்டி... எங்கே கல்யாணி புருஷன்... அதோ நிற்கிறார்களே... ம்... இவங்க எல்லாம் எதுக்கு வந்திருக்காங்க? அது சரி ராமச்சந்திரனோட பெண்டாட்டி, ரகுவோட பெண்டாட்டி குழந்தைங்க எல்லாம் எங்கே...? வரவில்லையா.. அல்லது கட்டிலுக்கு அந்தப் பக்கமா நிற்கிறாங்களோ...! என்னால் தலையைத்தான் அசைக்க முடியுதே தவிர, உடம்பை ஒன்றும் செய்ய முடியலியே.. ஈஸ்வரா... இவங்க எல்லாம் இப்ப எதுக்கு வந்திருக்காங்க?' ராகவானந்தத்தின் மனம் புலம்பியது.



அவர் தலை அசைந்து முன்பு இருந்தபடியே ஒரு பக்கமாகச் சாய்ந்து கொள்ளக் கண்களுக்கு நேர் எதிரில் புகைப்படலத்துக்கு நடுவில் அந்த சைக்கிள்.

"சைக்கிள் கடை கரீம் பாய்கிட்டே சொல்லியிருக்கேண்ணா. அவன் இப்ப வந்து எடுத்துட்டுப் போயிடுவான்" என்றான் ரகு.

"டேய் ராமச்சந்திரா... அந்த சைக்கிள் இங்கேயேதான் இருந்துட்டுப் போகட்டுமே. அதுதான் உங்க கண்ணை உறுத்துதா?" என்றாள் உமா.

"என்னக்கா நீ! அப்பா வீட்டை எவ்வளவு அழகாக் கட்டி வச்சிருக்கிறார். இந்த வீட்டிலே அந்தப் பாடாவதி சைக்கிள் எதுக்கு? காயலாங்கடைக்குப் போக வேண்டியது. ஏதோ சைக்கிள் கடை பாய் எடுத்துக்கிறேன்கிறான். போகட்டும் விடேன்" என்றான் ராமச்சந்திரன்.

"ஏன் அதை ரிப்பேர் பார்த்து வச்சுக்கப்படாதா?" என்றாள் உமா.

"அதைச் சரிசெய்ய ஆகிற செலவுல வேற புது சைக்கிளே வாங்கிடலாம். இப்ப யாருக்கு இந்த சைக்கிள் வேணும். என்னிடமும் அண்ணாவிடமும் மோட்டார் சைக்கிளே இருக்கு." ரகுவரன் இடைபுகுந்து பேசினான்.

'ஆமாப்பா மகனுங்களா.. உங்களிடம் மோட்டார் சைக்கிள் இருக்கும். ஏன் மோட்டார் கார் கூட இருக்கும். ஆனா உங்க அப்பனால ஒரு சாதாரண சைக்கிள்தான் வாங்க முடிந்தது. அடேய் பிள்ளைகளா உங்களுக்கு எல்லாம் அந்த சைக்கிளைப்




அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி
ரூ. 750/— இரண்டாம் பரிசுக் கதை.

பற்றி என்னங்கடா தெரியும்' ராகவானந்தத்தின் மனம் குமுறியது.

'...ஜானகி பயலுங்க நம்ப சைக்கிளைப் பற்றி எப்படிக் கேவலமாகப் பேசறாங்க பார்த்தாயா... அது பாடாவதி சைக்கிளாம்.. அதைக் காயலாங்கடையிலே போடறாங்களாம்... ஜானகி பார்த்தியா?'

எப்பொழுதோ சுமங்கலியாகப் போய்ச் சேர்ந்த மனைவி ஜானகியைக் கண்முன்னால் நிறுத்திக் கேட்டார் ராகவானந்தம். அவர் கண்களில் வழிந்த கண்ணீர் மெல்லத் தலையணையை நனைக்க...

ஏறக்குறைய இருள் சூழும் மாலை நேரத்தில் அந்த ஓலைக்கூரை மண் வீட்டின் முன் மணி அடித்தபடி சைக்கிளில் வந்து இறங்கினான் ராகவானந்தம். மணி சத்தம் கேட்டதும் வீட்டினுள் இருந்து வெளியே வந்தார் அவன் தந்தை.

''அப்பா நீங்க சொன்ன மாதிரியே என்னோட முதல் சம்பளத்தில் இந்தப் புது சைக்கிளைப் பூட்டிக் கொண்டு வந்துட்டேன்'' என்றான் இளைஞன் ராகவானந்தம். அவன் முகத்தில் ஒரு சாதனையின் அறிகுறி. அந்தச் சாதனையின் புளகாங்கிதம் அவனுடைய முகத்தில் அப்பட்டமாகத் தெரிந்தது.

''பரவாயில்லை ராகவா, உன்னோட ஆசை பூர்த்தி ஆயிட்டதல்லவா?''

''ம்..

பச்சை நிறத்தில் புது மினுமினுப்பில் அந்தச் சைக்கிள் கம்பீரமாக நின்றது. கும்மென்று உப்பலாக இருந்த சீட்டை ஒரு தட்டுத் தட்டி விட்டு அந்தப் புது சைக்கிளைச் சுற்றிப் பார்த்தார் அவன் தந்தை.

''ராகவா சைக்கிள் நல்லா இருக்குப்பா. என்னால் கேவலம் வெறும் கட்டை வண்டிதான் வாங்க முடிந்தது. நீ சைக்கிள் வாங்கிட்டே.பத்திரமா வச்சுக்க.''

''அப்பா! கட்டை வண்டின்னா அது மட்டும் கேவலமாப்பா. அந்தக் கட்டை வண்டிய நீங்க ஓட்டினதாலதான் நான் படிச்சேன். ஆளானேன். இன்னைக்கு வாத்தியார் உத்தியோகத்துக்கும் போனேன். அதுதான் நமக்குச் சோறு போட்டதுப்பா. இந்த சைக்கிளை விட எவ்வளவோ உயர்ந்ததுப்பா...''

''ஆமா ராகவா. நீ வாத்தியார். அதான் விவரமாப் பேசறே... ராகவா ஜடப் பொருளோ அல்லது உயிர்ப் பொருளோ எது என்றாலும் சரி அதுக்கு என்று ஒரு சரித்திரம் இருக்கு... இருக்கும்.''

காலை நேரம், ராகவன் சைக்கிளைத் துடைத்துக் கொண்டிருந்தான். மூன்று மைல் தூரத்தில் இருக்கும் பள்ளிக்குச் செல்ல வேண்டும் என்ற 'லேசான அவசரம். அப்போது அவன் தந்தை வந்தார்.

''ராகவா...''

''என்னப்பா?''

''நம்ம கதிர்வேல் இருக்கிறாரே அலங்காநல்லூரிலே...''

''ஆமா.''

''அவரோட பொண்ணு ஜானகியை உனக்குப் பேசலாம்னு நினைக்கிறேன்.''

''செய்யுங்கப்பா.. நீங்க எது செய்தாலும் சரிதான்.''

''சரி நீ சைக்கிளை எடுத்திட்டு ஒரு நடை அலங்காநல்லூர் போய்ப் பொண்ணைப் பார்த்திட்டு வந்திடேன்.''

''எப்பப்பா?''

''எப்பன்னு ஜோசியரைப் பார்த்து நான் சொல்றேன். போயிட்டு வந்திடு.''

''சரிப்பா.''

இனிய கானத்துடன் பறவைகள் எல்லாம் கூட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்த மாலை நேரம். இளம் குளிர் காற்று வீசியது. அந்த வண்டிப் பாதையில் ராகவானந்தம் சைக்கிளை ஓட்டிக் கொண்டிருந்தான். பின்னால் கேரியரில் ஜானகி.

''ஜானகி.''

''ம்...'' அவள் கழுத்தில் புது மஞ்சள் சரடு.

''இந்தச் சைக்கிள் நல்லா இருக்கா?''

''ம்.. இந்தச் சைக்கிளும் நல்லா இருக்கு. இதை ஓட்டற நீங்களும் நல்லா இருக்கிங்க.''

''அப்படியா இதன் பின்னால் உட்கார்ந்திருக்கிற நீயும் நல்லா இருக்கே...'' என்றபடி சைக்கிளை ஸ்டாண்டு இட்டு நிறுத்திச் சீட்டில் முழங்கை ஊன்றி ஜானகியின் எழில் முகத்தை நோக்கினான்.

''ஜானகி... நீ இப்ப எப்படி இருக்கே தெரியுமா?''

''எப்படி இருக்கேன்?''

''ஓர் அழகான ராஜகுமாரி ரதத்திலே உட்கார்ந்து இருப்பது போல இருக்கே.''

''போங்க உங்களுக்கு எப்பவும் கேலிதான். சைக்கிளை எடுங்க சினிமாவுக்குப் போகலாம்.''

''மகாராணி உத்தரவு'' என்று கைகளை விரித்துத் தலைகுனிந்து, பவ்வியமாகச் சொன்ன ராகவானந்தம் சைக்கிளை நகர்த்தி மிதித்து ஏறி.. ஏதோ ஒரு ராஜ ரதத்தை ஓட்டும் சாரதி போல நிமிர்ந்து உட்கார்ந்து ஓட்டினான். ஜானகி மெல்ல அவன் முதுகோடு இழைந்தாள்.

இரவு நேரம். வெளியே காற்று மின்னல் இடியுடன் மழை பெய்து கொண்டிருந்தது. உள்ளே படுக்கையில் ஜானகி வலியால் துடித்துக் கொண்டிருந்தாள். அருகில் அவள் தாய் அமர்ந்து தாயாகப் போகும் தன் மகளுக்குச் சுடு தண்ணீரில் ஒத்தடம் கொடுத்துக் கொண்டிருந்தாள். நேரம் ஆக ஆக ஜானகியின் வலியும் துடிப்

பும் அதிகமாகிக் கொண்டிருந்தது. அதே போல வெளியே மழையும் அதிகமாகிக் காற்று ஊழித்தாண்டவம் ஆட சில வீட்டின் கூரைகள் பறந்தன.

ராகவானந்தத்துக்கு ஒன்றும் புரியாமல் கைகளைப் பிசைந்து கொண்டு வலியால் துடித்த மனைவியை மனம் துடிக்கப் பார்த்துக் கொண்டிருந்தான். அடுத்த அறையில் இருந்த அவன் தந்தை அவனைக் கூப்பிட்டார்:

"ராகவா, புதுப்பாளையத்திலே ஒரு மருத்துவச்சி ஆயா இருக்கா... நீ போய் அவளை..."

"ஆமாம்ப்பா ஜானகி வலியால் துடிக்கிறா. இனியும் நாம பார்த்துட்டே சும்மா இருக்கப்படாது. சைக்கிளை எடுத்திட்டுப் போய் அந்த ஆயாவை அழைச்சிட்டே வந்திடறேன்."

"புறப்படு. மழையும் காத்துமா இருக்கு.. பார்த்துப்போ. அந்த ஆயா வரமாட்டேன் கிரமாட்டேன் அப்படி இப்படின்னு ஏதாவது சாக்குப் போக்குச் சொன்னா விடாதே. காசு பணம் சேர்த்துக் கொடுக்கிறேன்னு சொல்லி கையோடு கூட்டிட்டு வந்திடு... என்ன...?"

"சரிப்பா."

ராகவானந்தன் சைக்கிளில் புறப்பட்டான். ஊரைக் கடந்த பிறகுதான் காற்றின் எதிர்ப்பும் மழையின் தாக்குதலும் முழுமையாக அவனுக்குப் புரிந்தது. இரண்டு மைல் தூரத்தில் இருக்கும் புதுப்பாளையத்துக்கு இந்தச் சைக்கிளில் சென்று வர முடியுமா என்று மலைப்பாக இருந்தது. ஆனாலும் தன் அன்பு மனைவி ஓர் உயிரை ஈன்று கொடுக்கும் மகத்தான மரணப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிறாள்... என்ற உணர்வு அவன் உள்ளத்துக்கும் உடலுக்கும் ஓர் உறுதியைக் கொடுத்தது. அதனால் சைக்கிள் சற்று வேகமாக முன்னேறியது.

காற்றும் மழையும் ஓங்காரமிட்டன. இருளுக்கு இடையில் கண்களைக் குருடாக்க மின்னல்கள் முனைந்த போது, காதைச் செவிடாக்க இடிகள் முனைந்தன. ராகவானந்தம் எதற்கும் தளர்ந்து போகாமல், எதையும் பொருட்படுத்தாமல் எதிர்ப் போராட்டமிட்டுச் சைக்கிளை மிதித்தான். புதுப்பாளையத்தை அடைந்து மருத்துவச்சி ஆயா வீட்டை நெருங்கிக் கதவைத் தட்டி விவரத்தைச் சொன்னான்.

ஆயாவைச் சைக்கிளில் உட்கார்த்தி வைத்துக் கொண்டு மீண்டும் ஒரு போராட்டப் பயணத்தைத் துவங்கினான். மனத்துக்குள் எவ்வளவோ அவசரங்கள் இருந்தாலும் அந்தச் சைக்கிளை அழுத்தி மிதிக்கும் போதெல்லாம் எங்கே செயின் அறுந்து நடு வழியிலே தன்னை தடுமாறச் செய்து விடுமோ, நேரத்தைக் கடத்தி விடுமோ என்று அஞ்சினான். ஆனால் அந்தச் சைக்கிள்

அருள்வாக்கு



# அதர்மத்தை எதிர்க்க வேண்டும்...

'கலிதான் அதர்மயுகமென்றால் நாம் அதர்மமாகத்தான் இருந்து விட்டுப் போவோமே!' என்று சொல்வது தப்பு. "திருடர்கள் ஆபத்து ஜாஸ்தி இருக்கிறது" என்று போலீஸ் தண்டோராப் போட்டால் என்ன செய்வோம்? திருடர்கள் வந்து எடுத்துக் கொண்டு போகட்டும் என்று நாமே உடைமைகளைத் தெருவில் போட்டு விட்டா உட்கார்ந்து கொண்டிருப்போம்? 'காப்பாற்ற முடிகிற வரையில் காப்பாற்றிக் கொள்வோம்' என்றுதானே ஜாக்ரதை செய்து கொள்வோம்? போலீஸ் தண்டோரா போட்ட தன் நோக்கமும் இப்படி ஜாக்ரதை செய்து, முடிந்த மட்டும் ரக்ஷித்துக் கொடுப்பதற்குத்தானே? "கலி அதர்ம ஆட்சியை ஆரம்பித்து விட்டான்" என்று சாஸ்திரங்கள் தண்டோராப் போடுவதற்கும் தாத்பர்யம் கூடிய மட்டும் தர்மத்தை ஜாக்ரதையாக ரக்ஷித்துக் கொள்வதற்குத்தானே ஒழிய, 'ஒன்றும் பண்ணிக் கொள்வதற்கில்லை' என்று, இருப்பதையும் விட்டு விட்டு வீணாகப் போவதற்கல்ல.

இந்தயுகத்தில்வரும்அதர்மபிரவாஹத்தை ஒருவன் எதிர்த்து நின்றால்தான் மற்ற யுகங்களில் செய்யும் தர்மாநுஷ்டான பலனை விடக் கோடி மடங்கு பலன் பெறலாம். எதிர்ப்பு உண்டான சமயத்தில் தடுத்து நின்றால்தான் பெருமை அதிகம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள்.

## கலர் டீ. வி. பரிசு!

**குலுக்கல் நாள் நெருங்கி விட்டது!**

**இப்போது வாரா வாரம் கல்கியில் வெளியாகிக் கொண்டிருக்கும் டீ.வி. — வீடியோ பக்கங்களுக்கு உங்கள் அனுபவங்களை எழுதலாம். நீங்கள் எழுதுவது நறுக்கென்று சுருக்கமாக இருக்க வேண்டும்; வாய்விட்டுச் சிரிக்கச் செய்ய வேண்டும். டீ.வி — வீடியோ பற்றிய விமர்சனங்களையும் எழுதலாம்.**

**ஒரேயொரு நிபந்தனைதான் — நீங்கள் அனுப்பும் துணுக்கு அல்லது விமர்சனத்துக்கு மேல்புறம், மிக அண்மையில் வெளியான கல்கி இதழின் தலையங்கப் பக்கத்தில் மூன்று வரிகளாய் இருக்கும் தேதிப் பகுதியை மட்டும் கத்திரித்து ஒட்டியனுப்ப வேண்டும்.**

**பிரசுரமாகும் ஒவ்வொன்றும் ரூ. 25 பெறும். பிரசுரமாகும் அனைத்துக்கும் வரிசை எண் தரப்பட்டுக் குலுக்கல் முறையில் ஒருவருக்குக் கலர் டீ.வி. பரிசு!**

**இன்னும் நான்கு வாரங்கள்தான் இருக்கின்றன. உடனடியாக எழுதுங்கள்.**

**— ஆசிரியர்.**

அப்படியெல்லாம் எதுவும் செய்து விடாமல் அவர்களை வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்தது.

அறையின் உள்ளே அலறல் போராட்டம் தொடர, வெளியே மழை, காற்றின் ஆர்ப்பாட்டம் மெல்ல மெல்லக் குறைந்து மறைய, கிழக்கே வானம் சிவக்கத் தொடங்கிய போது அந்தப் புதிய உயிரின் இனிய அழுகைக் குரல் கேட்டது.

ராகவானந்தம் மெய்சிலிர்த்துப் போனான். ஆனந்தக் கண்ணீருடன் அவன் தந்தை வந்து மகன் தோளில் தட்டிக் கொடுத்தார். மருத்துவச்சி ஆயா அறையை விட்டு வெளியே வந்து "பெண் குழந்தை பிறந்திருக்கு. குழந்தை நல்லா சிவப்பா இருக்கு.. தம்பி இன்னும் ஓர் அரை மணி நேரம் நாம தாமதமா வந்திருந்தா... ஒண்ணும் சொல்ல முடியாது போயிருக்கும்..." என்றாள்.

ராகவானந்தம் சற்று அதிர்ச்சி அடைந்தான். மெல்லத் தலையைத் திருப்பி வெளியே பார்த்த போது காலைக் கதிரவனின் மென்கிரணம் பட்டு அந்தச் சைக்கிள் மின்னியது.

**கா**லை நேரம். மகள் உமாவை சைக்கிள் சீட்டில் உட்கார்த்தி வைத்து ராகவானந்தன் பின்பக்கக் கேரியரில் உட்கார்ந்து சைக்கிளை மிதித்தபடி வீட்டின் முன் வாசலில் வட்டமடித்துக் கொண்டிருந்தான். வீட்டு வாயில்படியில் நின்றபடி அவர்களைப் பார்த்துக் கைதட்டிக் கொண்டு சிரித்தான் மூன்று வயது ராமச்சந்திரன். உமா தம்பியைப் பார்த்துக் கையை ஆட்டிச் சிரித்தபடி சுற்றிச் சுற்றி வந்தாள். குழந்தைகளின் குதூகலத்தை ரசித்தபடி ராகவானந்தம் சைக்கிளை ஓட்டினான். அப்போது ஜானகி வீட்டினுள் இருந்து வெளியே வந்தாள்.

"என்னங்க நீங்க.. இந்த பிள்ளைகளோடவே விளையாடிட்டு இருக்கீங்க.. இன்றைக்குக் கடைக்கால் எடுக்கணும். ஆட்களை வரச் சொல்லியிருக்கேன்னீங்க. ஒருத்தரையும் காணலியே."

"ஜானகி அவங்க எல்லாம் எட்டு மணிக்கு மேலேதான் வருவாங்க. பொறு."

"அப்பா கடைக்கால்னா என்ன?" சைக்கிளில் உட்கார்ந்து சுற்றி வந்த உமா கேட்டாள்.

"அது வந்து... நாம புதுசா வீடு கட்டப் போறோமே... அதுக்குச் சுவர் கட்ட அஸ்திவாரம் வெட்டணும். அப்படி வெட்டறதுக்குத்தான் கடைக்கால் எடுக்கிறதுன்னு பேரு. சரி நீ ஒண்ணு செய்வியாம்.. சைக்கிளில் இருந்து இறங்கிக்குவியாம். தம்பியைப் பார்த்துக்குவியாம். அம்மா டிபன் செய்யுமாம். அப்பா போயி வேலை செய்யற ஆட்களை அழைச்சிட்டு வருவேனாம்... என்ன?"

"சரியாம்."

ராகவானந்தம் ஜானகி இருவரின் கற்பனைக் கனவாக இருந்த வீடு மெல்ல மெல்ல நனவாக ஆரம்பித்தது. அஸ்திவாரத்துக்கு உடை கல்லுக்கும், மேடை கட்ட உளி கல்லுக்கும், செங்கல்லுக்கும் மணலுக்கும், சிமெண்டுக்கும் என்று ராகவானந்தம் ஒவ்வொன்றுக்கும் ஆக பல இடங்களுக்கும் சைக்கிளிலேயே அலைந்தான்; சேகரித்தான்.

**அ**ந்த மண் வீடு செங்கல் கட்டடமாக மாறிய போது ஏறக்குறைய இரண்டு வருட காலத்தையே சாப்பிட்டிருந்தது. ராகவானந்தத்துக்குக் கடன் சுமை ஏறியிருந்தது. அதே போலக் குடும்பத்துச் சுமையும் கூடியிருந்தது. ரகுவரன் பிறந்து விட்டான். உமாவும் பூப்பெய்திருந்தாள். சைக்கிள் வண்ணம் தேய்ந்து ஓட்டும் போது கீச் கீச், சடக் படக் என்று சத்தம் போட ஆரம்பித்திருந்தது. ஆனாலும் ராகவானந்தத்துக்கும் ஜானகிக்கும் அந்தச் சிறிய அழகான வீடு மனத்துக்குள் ஒரு நிறைவை உண்டாக்கியது.

உமாவினால் ஒன்றும் பெரிதாகப் படிக்க முடியவில்லை. எனவே ஜானகி அவளைப் பள்ளியிலிருந்து நிறுத்தி விட்டாள். அப்போது ஜானகி வயிற்றில் கல்யாணி வளர்ந்து கொண்டிருந்தாள். ராமச்சந்திரன் படிப்பில் படுசுட்டியாக இருந்தான். ரகுவரன் தானும் சளைத்தவன் அல்ல என்று நிரூபித்தான்.

உமா பிறந்தது போலவே காற்றும் மழையும் நிறைந்த ஒரு நாள் இரவுதான் கல்யாணியும் பிறந்தாள். மூத்தவர்கள் மூவரும் பிறக்க உதவி செய்த அதே மருத்துவச்சி ஆயாதான் கல்யாணிக்கும் வந்தாள். ஆனால் இந்த முறை அந்த ஆயாவால் கல்யாணியைத் தான் காப்பாற்ற முடிந்தது. ஜானகி விடை பெற்றுக் கொண்டாள்.

அந்த அதிகாலை நேரத்தில் ஜானகியின் இறப்புச் செய்தியை அவளுடைய பிறந்த வீட்டாருக்குத் தெரிவிக்க ராமச்சந்திரன் தான் சடக் படக் என்று சத்தம் போட்ட சைக்கிளில் புறப்பட்டான்.

**தா**யற்ற நான்கு குழந்தைகள்! அவர்களின் வளர்ப்பு! உணவு, துணி, கல்வி, காலாகாலத்தில் திருமணம், வேலை எல்லாவற்றுக்கும் தேவையான பணம்! அதனால் கடன், அதனால் சுமை. ராகவானந்தம் எல்லாச் சுமைகளையும் தன் தோள் மீது ஏற்றிக் கொண்டு எதிர் நீச்சல் போட்டார். வளைந்து கொடுத்து வளைந்து கொடுத்து வாழ்க்கையை ஓட்டியதால் உடல் வளைந்தே போனார். அவருடைய ரிட்டையர்மெண்ட் அவரின் சுமையை இறக்கி வைத்தது. சுமை இறங்கி யும்கூட வளைந்த உடல் வளைந்தே இருக்க...

..மெல்ல தான் நடந்து வந்த பாதையைத் திரும்பிப் பார்த்தார்... அடடா...

உமாவுக்கு இரண்டு குழந்தைகள். ராமச்சந்திரனுக்கும் இரண்டு குழந்தைகள். ரகுவரனுக்கு ஒரு குழந்தை. ஆல்கொண்ட நிலையில் கல்யாணிக்குட்டி.... அடடா... எப்படி விரிந்து பரந்த மரம்...!

'...அடடே ஜானகி வா.. வா... ஜானகி பார்த்தாயம்மா... பார்... நம் குழந்தைகள் எல்லாம் எப்படி ஆல விருட்சம் போலப் பூத்துக் குலுங்குகிறார்கள். பார். பார்...'

'அது சரிங்க சைக்கிளைப் பற்றி என்னவோ சொன்னீங்களே...?'

'...ம்... ஆமாம்மா.. பாரு நம்ம சைக்கிள் பாடாவதி சைக்கிளாம். அத எங்கயோ காயலான் கடைக்குப் போடணுமாம்... பிள்ளைக சொல்றாங்க.'

'அப்படியா சொன்னாங்க...?'

'ஆமா ஜானகி. அதுதான் எனக்கும் மனசு கஷ்டமா இருக்கு. அந்தச் சைக்கிள் ஒரு ஜடப் பொருள்தான். ஆனா அதுக்கும் ஒரு சரித்திரம் இருக்கு. அதப் பார்க்கிறபோதெல்லாம் நம்ம வாழ்க்கையின் அத்தனை படிகளும் ஞாபகம் வருது. அந்த ஜடமான சைக்கிள் நமக்கு எவ்வளவு விசுவாசமா இருந்தது! ஆனா உயிர் இருக்கிற இந்தப் பிள்ளைக... ஜானகி... ஜானகி... அங்க பாரு...'

"**டே**ய் ராமச்சந்திரா என்னடா இது வெகு நேரமா அப்பாவிடம் எந்தச் சலனமும் இல்லையே'' என்றாள் உமா.

எல்லோரும் ராகவானந்தத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டு கட்டிலைச் சுற்றி மௌனமாக நின்று கொண்டிருந்த போது, சைக்கிள் கடை கரீம் பாய் வந்தான்.

''பாய்! அதோ அந்தச் சைக்கிள்தான். நீ எடுத்திட்டுப் போ. நான் பிறகு கடைக்கு வரேன்'' என்றான் ரகுவரன். கரீம் பாய் சைக்கிளை நெருங்கி ஸ்டாண்டை விலக்கி...

'ஜானகி, ஜானகி... பார் பார் நம்ம சைக்கிள் நம்ம வீட்டை விட்டுப் போகுது.. போகுது...'

'போகட்டும் விடுங்க. சைக்கிளை வச்சுப் பாதுகாக்காத பிள்ளைகளா உங்களை வச்சுக் காப்பாற்றப் போறாங்க... விடுங்க. நீங்க மெல்ல எழுந்திருங்க.. நாம... போகலாம்.'

'அப்படியா. போகலாங்கிறயா...? சரி...!'

'இந்தாங்க என் கையைப் பிடிச்சு எழுந்திருங்க. மெல்ல.... ம்.. அப்படித்தான் மெல்ல... மெல்ல...'

இரண்டு உயிர்க் குருவிகள் ஒன்றோடு ஒன்றாக...

''டேய் ராமச்சந்திரா அப்பாவுக்கு இழுக்குது. அந்தப் பால் தம்ளரை எடு'' என்றாள் உமா. அவள் குரலில் ஒரு சோகமும் அவசரமும் இருந்தது.

ராமச்சந்திரன் அவசர அவசரமாகப் பால் தம்ளரை எடுத்து ராகவானந்தத்தை நெருங்கிய போது அவர் அமைதியாகி யிருந்தார்.

---

''என் பிள்ளை 'பெண்டாட்டி தாசனா' மாறிடுவான்னு, எனக்கு அப்பவே தெரியும்...!''

''எப்படி...?''

''நலங்கின் போது, பெண் பாடியதும், 'ஒன்ஸ்மோர்' கேட்டானே...!''

— ஆர். வசந்தகுமார்.



கும்பலை விலக்கிய தருமன் குப்பத்தின் மையத்தில் அமைந்திருந்த அந்தத் திறந்திருந்த டிச்சில் விழுந்திருந்த சிட்டுவைக் காப்பாற்ற உள்ளே இறங்கி, அவளை வெளியே இழுத்து வந்தான்.

வீட்டிற்கு அழைத்து வந்து, சிட்டுவை மூர்ச்சை தெளிய வைத்து அவளைக் குளிப்பாட்டிச் சுத்தப்படுத்திய பின்னர், குப்பத்தினர் ஆளுக்கு ஆள் அவளது அவசர புத்தியைக் கண்டித்து அறிவுரை கூறினார்கள். தருமன் அவர்களை அமைதிப்படுத்தி விட்டு, "ஏம்மே இப்ப சாவறதாலே நீ இன்னா சாதிச்சிடுவே, சொல்லு பார்க்கலாம்? நீ பாட்டுக்கு இ ப் ப டி ப் பண்ணிட்டியேம்மா... காணாமப் போன குத்துவெளக்கு நீ. உன்னைக் கண்டுபுடிச்சி உங்கப்பங் கைலே குடுக்கலாம்னு பார்த்தா...? அந்த கூடத்துலே வெச்சிக் கொளுத்த உங்கப்பனுக்குக் குடுத்து வைக்கலே. குத்துவெளக்கு கோயில்லே இருந்தா இன்னா, குப்பத்துலே இருந்தா இன்னா... நீ இங்கியே இரும்மே. இன்னா யக்கா...?" என்று சொல்லிக் கொண்டே அவளது பதிலையும் எதிர்பாராது வெளியேறினான் தருமன்.

**அத்தியாயம் 17**
**"இரண்டு கண்டிசன்கள்!"**

# என் உயிரத



சிட்டு குடிசையில் தங்க ஆரம்பித்து ஓரிரு நாட்கள் நகர்ந்ததும் அவளது நடவடிக் கைகளைக் கூர்ந்து கவனித்த தருமன் அவள் அந்தக் குப்பத்திலிருக்க மிகவும் சங்கடப் படுவதை உணர்ந்தான். திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தவனாகத் தருமன் சிட்டுவின் பெட்டி படுக்கைகளை எடுத்து ரிக்ஷாவில் ஏற்றியவாறே, ''யக்கா, அந்தப் பொண்ணை வெளியே கூப்பிடு'' என்றான்.

வெளியே வந்த பொன்னம்மா, ''அத்தே எதுக்குடா கூப்பிடுறே?'' என்று கேட்ட வாறே, ''இந்தாம்மா சிட்டு, இங்கே கொஞ் சம் வா. தருமன் கூப்பிடுறான் பாரு.'' என் றாள்.

பொன்னம்மாவின் குரலுக்குச் சிட்டு வெளியே வந்து, ரிக்ஷாவில் தனது பெட்டி படுக்கைகளைப் பார்த்து அதிர்ச்சியடைந் தான்.

''இன்னாம்மே பாக்குறே. ஏறிக் குந்து.''

''டேய், அத்த எங்கேடா பொட்டி படுக் கையோட கூட்டிக்கினு போறே?''

''தூ தேறிக்க... போவச் சொல்லவே எங் கேன்னு கேளு? வெளங்கிடும் போற காரி யம்! தே... நீ ஏறிக் குந்தும்மே. யக்கா நான்

# தோழன்

பாரதிராஜா





''உன்னோட கணவர் ஏன் கோபமா இருக்கார்?''

''ஆபீஸ்ல சேர்ந்து ரெண்டு வாரம் ஆகுது; இன்னும் தூங்கக் கூடத் தெரியலை... நீயெல்லாம் ஓர் ஆம்பிளையான்னு ப்யூன் கேட்டுட்டானாம்...!''

— ஆர். என். கண்ணன்.

போயிட்டு வந்து உங்கைலே எங்க ஏதுன்னு வெலாவாரியாச் சொல்றேன் சர்த்தானா?'' என்றான்.

சிட்டு வண்டியிலேறி அமர, வண்டியை மிதித்தான்.

தருமன் சென்ற சற்று நேரத்திற்கெல்லாம் 'பங்கி முருகேச' தருமனின் வீட்டைக் கடக்க, அங்கு கூடி இருந்த பொன்னம்மா உட்பட அனைத்துப் பெண்களும், ''டேய் பங்கி, இன்னாடா நெனச்சிக்கினுகீறான் உன் தோஸ்து. இன்னா கேட்டாலும் பதிலே சொல்லாமே அவன் பார்ட்டுக்கு அந்தப் பொண்ணோட பொட்டி படுக்கையெல்லாம் எடுத்து வெச்சுக்கினு அத்தையும் கூட்டிக்கினு போறானே இது நாயமா?'' என்று பிலுபிலுவென்று பிடித்துக் கொண்டார்கள்.

திணறித் திண்டாடிப் போன பங்கி, ''தே, இப்ப இன்னா நடக்கக் கூடாதது நடந்துடுச்சின்னு எல்லாருமே கூடிக்கினு கூவுறீங்க...? அம்... தருமன் எத்தச் செஞ்சாலும் அத்தக் கரீக்டாத்தான் செய்வான். சொம்மா புரியாம பேசாதீங்க... தோ... அவனே வந்துகினுகீறான் பாரு.'' என்று அவன் காட்டிய திசையில் தருமன் ரிக்ஷாவில் வந்து கொண்டிருந்தான்.

ரிக்ஷாவிலிருந்து இறங்கிய தருமன், பொறுமையாக ஒரு பீடியை எடுத்துப் பற்ற வைத்தான். ''எல்லாம் இன்னாத்துக்குக் கூடிகினுகீறீங்க? அந்தப் பொண்ணை எங்க இட்டுகினு போயி வுட்டுட்டு வரேன்னு உங்களுக்குத் தெரியணும். அவ்ளோதானே...? நானே சொல்றேன். ஏன்க்கா நீயும் ஒரு பொம்மனாட்டிதானே? ரெண்டு நாளா நம்ம குடிசையிலே அது எம்மாம் கஷ்டப்பட்டுச்சின்னு பாத்தியா? குளிச்சிதா...? வைச்சிதா...? அட அவ்ளோ ஏன், சோறாச்சும் துன்னுச்சான்னு பாத்தியா...? உனுக்கும் எனுக்கும்தான் இந்தக் கூவத்துக் காத்துலேயே துன்றதுக்குப் பயக்கமாயிடுச்சி. அது ரீஜன்டா இருந்த பொண்ணு. அதுக்கு நம்ம இடமெல்லாம் சரிப்படாதுன்னுதான் இட்டுகினு போயி அய்யரு வூட்லே வுட்டுட்டு வந்துட்டேன். அய்யரு வூட்டம்மா அத்த ரீஜன்டாப் பாத்துக்கும். இன்னா சர்த்தானா?''

பொன்னம்மா, ''சர்த்தான் அய்யரு வூட்டம்மா உன்னாண்ட அத்தப் பத்தி எத்தையும் வெசாரிக்கலையா?'' என்றாள்.

''எல்லாம் வெசாரிச்சது. நானும் ஏதோ என் வாய்க்கு வந்ததைச் சொன்னேன்... 'பொண்ணு நமக்குத் தூரத்து உறவு. நாட்டுப் பொறம். நல்லா வசதியா வாழ்ந்தவங்க. அத்தான் இங்க வந்து எதுனாச்சும் வேலை செய்லாம்னுச்சு. எனக்கு அத்த வூட்லே வெச்சிக்கப் புடிக்கலே. உங்களுக்கே தெரியும். நம்ம எடம் ஒரே கச்சடா. அத்தான் ரீஜன்டா ஏதாச்சும் எடத்துலே வுடலாம்னு பாத்தேன். டக்குனு எனக்கு உங்க நெனவுதான் வந்துது. மாமி. அதான் உங்க வூட்டுக்கு இட்டுகினு வந்துட்டேன். வேலை எல்லாம் நல்லாச் செய்யும் மாமி. நீங்க சம்பளம் கூடப் போட்டுக் குடுக்க வாணாம். அத்த வூட்டோட வெச்சிச் சோறு போட்டுப் பார்த்துக்கினாப் போதும் மாமி'ன்னேன். உனக்குத்தான் மாமியைப் பத்தித் தெரியுமே? அது மனசு பஞ்சு மாதிரி... 'உனக்கு இல்லாம வேறே யாருக்குடா செய்வேன்'னு சொல்லி, கூட்டிக்கினு பூடுச்சி. அய்யரு கூட, 'கவலைப்படாதே, போய் வா'ன்னிட்டாரு. இப்படி நான் செஞ்சதெல்லாம் தப்புன்னு பட்டாச் சொல்லுங்க. நான் இப்பவே போய் அத்த இங்க இட்டுகினு வந்துடறேன்.''

தருமன் சொன்னதைக் கேட்ட பொன்னம்மா, நனைந்த விழிகளோடு, ''டேய், ஏதோ என் வாயிலே வந்துதேன்னு உனக்குத் தருமன்னு பேரு வெச்சேன். ஆனா மெய்யாலுமா நீ தருமந்தான்டா ராசா...'' என்றவாறே அவனைக் கட்டிக்கொண்டாள்.

சோற்றுக் கடையைப் பரப்புவதற்கு முன் அதனைத் தலையில் வைத்துச் சுமந்தவாறு சென்று கொண்டிருந்த பொன்னம்மா, வழியில் 'பங்கி' முருகேச வருவதைப் பார்த்து அவனை அழைத்தாள்.

''பங்கி, தருமந்தான் உன் தோஸ்தாச்சே. அவங்கையிலே சொல்லி அந்தச் சூளைமேடு சுப்பராயன் பொண்ணைச் சீக்கிரமாக் கண்ணாலம் பண்ணிக்கச் சொல்லேன். வயசான காலத்துலே வீட்டுக்குன்னு ஒருத்தி வந்தா, எனக்கும் ஒத்தாசையா இருப்பா இல்லே...? கண்ணாலம்னு பேச்சு எடுத்தாலே எம்பி எம்பிக் குதிக்கிறானேடா...?''

''அது வந்து யக்கா... உங்கையிலே அத்த எப்பிடிச் சொல்றதுன்னே தெரியலே. கண்ணாலத்துக்கு அவன் போடற கண்டிசனைக் கேட்டீன்னா, அப்பாலே நீயே அவனுக்குக் கண்ணாலமும் வாணாம், ஒரு சைத்தையும் வாணான்னிடுவே. அ... ஆங்...''

''அது இன்னாடா அப்பிடி ஒரு கண்டிசனு?''

''அது வந்து யக்கா. ஒண்ணு தலைவரு தேதி குடுத்தாத்தான் கண்ணாலமே பண்ணிக்குவேங்கறான். அத்தக் கூட ஏற்பாடு பண்ணிடலாம். ஆனா அவன் போடற இன்னொரு கண்டிசனுதான் வயித்தக் கலக்குது...'' என்றான் 'பங்கி' முருகேச.

''அது இன்னாடா இன்னொண்ணு?'' என்றாள் பொன்னம்மா.

(தொடரும்)

1

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — VII

ராஜ்மோகன் காந்தி

* சூயென் லாய் — சிநேகத் துரோகம்.

# சீனப் படையெடுப்பு

இந்தியாவின் வடகிழக்கு எல்லையில் சீன ஆக்கிரமிப்பு நடந்தபோது ஸி. ஆர். லண்டனில் இருந்தார். இந்தியப் படை வீரர்களை விடச் சீன வீரர்கள் எண்ணிக்கையில் அதிகமாக இருந்தனர்; ஆயுத பலமும் சீனரிடம் அதிகம்; யுத்த சாணக்கியத்திலும் சீனர் சிறந்து விளங்கி, இந்திய வீரர்களைக் கொன்று குவித்தனர். நாட்டுக்கே அவமானத்தைத் தேடித் தந்த இந்தப் படுதோல்வி, மக்களின் கோபத்தைக் கிளறியது. பனிப் பாறைகள் மிகுந்த அந்தக் கடுங்குளிர் உயரத்தில், எல்லைப் பாதுகாப்பில் இருந்த நமது வீரர்களுக்குப் போதிய ஆயுதங்கள் இல்லை என்பதோடு, அவர்களுக்குப் போதிய அளவில் குளிருக்கு அடக்கமான உடைகள் கூட வழங்கப்படவில்லை என்று தெரிய வந்தபோது அது தலைகுனிவில் வேதனையையும் சேர்த்தது. எல்லாருடைய கோபமும் நேரு மீதும் பாதுகாப்புத் துறை அமைச்சர் கிருஷ்ணமேனன் மீதும் திரும்பியது. 'பீக்கிங்கின் நோக்கங்களைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் நேரு, கொள்கை அளவில் ஏமாந்து விட்டார்' என்றும், 'இந்தப் படுதோல்விக்கு நேரடியான பொறுப்பைக் கிருஷ்ணமேனன் ஏற்க வேண்டியவராகிறார்' என்றும், குற்றச்சாட்டுக்கள் கிளம்பின. மேனன் கம்யூனிஸச் சார்புள்ளவராகக் கருதப்பட்டதானது நிலைமையை மேலும் மோசமாக்கியது. மேனனிடம் ஸி. ஆருக்கு எப்போதுமே ஒரு பரிவு உண்டு. ஆனாலும் அவர், அதனை ஒதுக்கித் தள்ளிவிட்டு மேனனின் ராஜினாமாவைக் கோரினார். அதே நேரத்தில் மேனனின் கம்யூனிஸச் சார்புதான் இந்தத் தோல்விக்குக் காரணம் என்பதை ஸி. ஆர். ஏற்கவில்லை. நேருவைக் குற்றம் சொல்லாமலிருக்க மேனனைப் பலிகடா ஆக்குவதையும் அவர் விரும்பவில்லை. "இந்த நாட்டில் ஏராளமான மக்கள் மேனனைச் சந்தேகக் கண்ணோடு பார்க்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனால் பிரதமர்தான் கொள்கைகளை வகுத்துத் தந்தார் என்றால் மேனனைப் பதவி நீக்கம் செய்வது சரியல்ல. இது உண்மையல்ல, கொள்கைகளை வகுப்பதில் நேருவுக்குப் பங்கு ஏதுமில்லை என்றால் கிருஷ்ணமேனன் வெளியேறத்தான் வேண்டும்" என்றார் ராஜாஜி.

சீனர்கள் முன்னேற முன்னேற, காங்கிரஸ் எம். பிக்களும் கிருஷ்ணமேனனின் பதவி நீக்கத்தைக் கோரினார்கள். நாடாளுமன்ற காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் நேரு தாமே விலகிக் கொள்ள விரும்புவதாகத் தெரிவித்தார். இப்படிப் பயமுறுத்துவது முன்னர் பல தருணங்களில் பலனளித்திருந்தது. ஆனால் இப்போது மகாவீர் தியாகி, "அத்தகைய ஒரு நிர்ப்பந்தம் ஏற்பட்டால் அதையும் சந்திக்க வேண்டியதுதான்" என்று துணிந்து பேசினார். இந்தப் பேச்சு



* சீனப் படையெடுப்பின்போது அமெரிக்க ராஜீய உதவி: தற்காலிகமாக தூதர் கால்பிரெய்த்.



• கிருஷ்ணமேனன் : பதவிப் பறிப்பு.

மேனனின் பாதுகாப்பு அமைச்சர் பதவிக்கு முடிவு கட்டியது.

கிருஷ்ணமேனன் மகா புத்திசாலி. அதனாலேயே கர்வம் அதிகமாகக் கொண்டிருந்தார். எல்லாரையும் புண்படுத்துகிற சொற்களைப் பேசுவார். மேற்கத்திய நாடுகளின் எதிரி அவர். இந்தியாவின் எல்லைகளைப் பாதுகாக்க முடியாத பாதுகாப்பு மந்திரி, ராஜினாமா செய்ய வேண்டியதுதான் நியாயம் என்றாலும் இந்தியாவின் சீனக் கொள்கையை வகுத்துத் தந்தவர் அவரல்ல; நேருதான் அதனை உருவாக்கியவர்.

ஸி. ஆர். இவ்விஷயத்தில் மேற்சொன்னது போல் சுற்றி வளைத்து ஓர் அறிக்கை விட்டதற்கு அதிகமாக நேருவை நேரடியாகத் தாக்கவில்லை. நேருவைப் பதவி துறக்குமாறு பலவந்தப்படுத்துவது காரியசாத்தியமுமில்லை. விரும்பத் தக்கதும் அல்ல. அதுவும் ஆபத்தான இந்தத் தருணத்தில் நேருவின் தலைமை இன்றியமையாதது. அவர் ஒருவரால்தான் இந்தத் தோல்வியின் ஊடேயும் நாட்டு மக்களின் பேரன்பைப் பெற முடியும்; ஒருமித்த சிந்தனையை ஊக்குவிக்க முடியும்; நாடாளுமன்றத்தில் பெரும்பான்மை ஆதரவைப் பெற முடியும். எனவே ஸி. ஆர். நேருவின் கொள்கைகளில் தீவிரமான மாற்றங்களைக் கோரிய போதே, நேரு என்ற தனி மனிதருக்குத் தமது ஆதரவைத் தந்து ஊக்குவித்தார்.

"பிரதமரின் பேச்சு அற்புதமானது. தடுமாற்றம் ஏதுமற்ற, ராஜதந்திரத்தில் சிறந்த பேச்சு." (24.11.62)

"நமக்கு ஏற்பட்ட தோல்விகளுக்கு இடையிலும் நேரு தைரியமாகவும், கம்பீரமாகவும் நிமிர்ந்து நிற்கிறார். இறைவன் அவருக்கு மேலும் பலமளித்து ஆசி நல்கட்டும்." (1.12.62)

"அயல்நாட்டுக் கொள்கைகளில் அவசரமான மாற்றங்கள் தேவைப்படுகின்றன." (24.11.62)

"பாகிஸ்தானுடன் நேசப்பான்மையை வளர்த்துக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். இரு முனைகளில் நம்மால் ஒரே சமயத்தில் சண்டை போட முடியாது. (இரண்டாவதாக) மேற்கத்திய வல்லரசுகளுடன் நாம் நட்பை வளர்த்துக் கொள்வதுடன் நேச உடன்படிக்கைகளையும் செய்து கொள்ள வேண்டும்." (22.12.62)

மனமின்றித்தான் நேரு மேற்கத்திய வல்லரசுகளின் உதவியைக் கோரினார். உடனே உதவிவந்தது. அமெரிக்காவும்பிரிட்டனும் போர்த் தளவாடங்களையும் வீரர்களுக்கு மலைப்போருக்கு ஏற்ற உடை மற்றும் இதர உபகரணங்களையும் கொடுத்து உதவின. ஸி. ஆருக்குக் கென்னடி எழுதினார்:

"நாங்கள் ஏற்கெனவே இந்தியாவுக்கு ஓரளவு ராணுவ உதவி கொடுத்திருக்கிறோம். உங்கள் அரசு மேலும் உதவி கோரியுள்ளது. அதனைப் பரிசீலித்து வருகிறோம்." (5.12.62)

அமெரிக்க யுத்தக் கப்பல்கள் இந்தியாவுக்கு உதவத் தயாராக இருந்தன. சீனாவைப் பற்றிய ராணுவத் தகவல்களை இந்தியாவும் அமெரிக்காவும் பரஸ்பரம் பரிமாறிக் கொள்ள ஒப்புக் கொண்டன.

"இந்தியாவின் அணிசேராக் கொள்கை கைவிடப்பட்டு விட்டதா?"

"நடக்கிற காரியங்களைப் பார்த்தாலே தெரியவில்லையா, அந்தக் கொள்கைக்கு முற்றுப் புள்ளி வைத்தாகி விட்டது என்று!" என்று கூறினார் ஸி. ஆர். "அப்படியல்ல" என்று வாதாடினார் நேரு. "மேற்கத்திய வல்லரசுகள் ஒருபுறம், ருஷ்யா மறுபுறம் என்று உள்ள நிலையில் இந்தியா இன்னமும் அணிசேராக் கொள்கையையே கடைப்பிடிக்கிறது" என்றார். அதே நேரத்தில் அமெரிக்க மக்களுக்கான ஒரு ட. வி. பேட்டியில், "சீனாவின் ஆக்கிரமிப்பைக் கருதும் போது அதைப் பொறுத்தமட்டில் அணிசேராக் கொள்கை என்பதாக ஒன்றும் இடையாது" என்றார் நேரு.

"இதைக் கண்டு சிரிப்பதா அழுவதா என்றே தெரியவில்லை" என்று ஸி. ஆர். சொன்னார். "சீனாவைப் பொறுத்தமட்டில் அணிசேராக் கொள்கை செத்து விட்டது என்ற முடிவுக்கு வர, இத்தனை இந்திய வீரர்கள் சாக வேண்டுமா? இத்தனை வீரர்கள் காயமடைந்து அல்லது கடும் குளிரில் கருகிச் சித்திரவதைகளை அனுபவிக்க வேண்டுமா? பல்லாயிரக்கணக்கான சதுர மைல் பரப்பளவுள்ள புனித இந்திய பூமியை நாம் பறிகொடுத்தாக வேண்டுமா?

நமது ராணுவக் கொள்கை அடங்கிப் போவதாகவும் அனுசரித்துப் போவதாகவும் இருக்கக் கூடாது. வீரத்தையும் வேகத் துடிப்பையும் வெளிப்படுத்துவதாக அமைய வேண்டும் என்று ஸி. ஆர். கருதினார். 'ராணுவச் சாணக்கியம் என்பது பல அபாயங்களை உள்ளடக்கியதாக இருப்பினும் எதிரியை எப்போதும் முந்திக் கொள்வதாக அமைய வேண்டும்.'

ஆனால் ராஜாஜியின் துடிப்பு, நேருவுக்கு ஆபத்தை விலை கொடுத்து வாங்குவதாகத் தோன்றியதோ என்னவோ, அவர் அசைந்து கொடுக்கவில்லை. அவருடைய நல்லதிர்ஷ்டம், அணி சேராக் கொள்கையை மறுபரிசீலனை செய்ய அவசியமின்றி, சீனா, போர் நிறுத்தத்தை அறிவித்தது.

(தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்

# சீறாமல் சந்நியாசம்!

பட்டாபி தன் குடும்பத்தில் யாருடன் வாக்குவாதத்தில் இறங்கினாலும், அந்த வாக்குவாதம் முடியும் போது முத்தாய்ப்பாக இதைத்தான் சொல்லுவான். யாராவது அவன் விருப்பத்தை மீறி வாழைப்பழம் வாங்கிச் சாப்பிட்டாலும் இப்படித்தான்:

''நான் சொல்லி விட்டேன்.. இந்த ரீதியில் குடும்பம் ரொம்ப நாள் ஓடாது. ஒரு நாள் காவித் துணியை உடுத்திக் கொண்டு, கப்பரையை ஏந்தியபடி வெளியே நடக்கப் போகிறேன், பார்த்துக் கொண்டே இருங்கள்...''

அடிக்கடி இதை அவன் சொல்லிக் கொண்டிருந்ததால் இப்போதெல்லாம் அவன் பேச்சு வீட்டில் எல்லோருக்கும் விளையாட்டாகப் போயிற்று.

அவன் ''இந்த ரீதியில் குடும்பம்...'' எனத் தொடங்கினால் போதும், மறு நிமிஷம் ''காவித் துணியை உடுத்திக் கொண்டு கப்பரையை ஏந்தியபடி...'' என முடித்து விடுவார்கள்!

நான்கு நாட்களாகப் பட்டாபி ஊரிலே இல்லை. தொழிற்சங்க வருடாந்திர மகாநாடு ஒன்றில் அவன் அலுவலகப் பிரதிநிதியாகக் கலந்து கொள்ள வெளியூர் போயிருந்தான்.

இந்த நான்கு நாட்களில் பட்டாபி சுலபமாக ஜீரணிக்க முடியாத பல விஷயங்கள் நடந்துவிட்டன. அவன் மனைவி தெருவில் வேதகோஷம் செய்து கொண்டு போன அந்தணருக்கு ஐந்து ரூபாய் தானம் செய்திருந்தாள். மூத்த மகள் பிரபா, தீபாவளிக்கு வாங்கியிருந்த புடைவையை வேலைக்காரப் பெண்ணுக்குத் தந்திருந்தாள். பெரியவன் ராஜா, அம்மா கஷ்டப்படுகிறாளே என்று இரண்டாவது காஸ் ஸிலிண்டருக்குப் பதிவு செய்திருந்தான். கடைசிப் பிள்ளை ரவி நூறு ரூபாய் செலவில் கோவை சென்று விளையாட்டுக்களில் பங்கு கொண்டு ஒரு கோப்பை கூட இல்லாமல் வெறும் கையுடன் திரும்பியிருந்தான்.

ஊரிலிருந்து திரும்பி வந்த பட்டாபி, இதையெல்லாம் கேள்விப்பட்டு ஒரேயடியாகக் கத்தித் தீர்த்தான்.

''எக்கேடும் கெட்டுப் போங்கள்! இப்போது நான் சொல்றதைக் கேட்டுக் கொள்ளுங்கள். இது சும்மா பயமுறுத்தல் இல்லை. இன்று நான் நிச்சயம் ஆபீஸிலிருந்து திரும்பி வர மாட்டேன். ஏதாவது மடத்தில் சேர்ந்து விடப் போகிறேன். எல்லோரும் நடுத்தெருவிலே போய் நில்லுங்க... எனக்கென்ன வந்தது...?''

பட்டாபி ஆபீஸ் புறப்பட்டுப் போன பிறகுதான் எல்லோரும் மூச்சே விட்டார்கள்.

அன்று இரவு பட்டாபி ஆபீஸிலிருந்து வீடு திரும்பவில்லை.

இரவு பத்து மணிக்கு மேல்தான் வீட்டில் கவலைப்படத் தொடங்கினார்கள். பிள்ளைகள் இரண்டு பேரும் தெரிந்தவர்கள் வீட்டில் விசாரித்தார்கள். பட்டாபியுடன் கூடப் பணிபுரியும் நண்பர்களைப் போய்க் கேட்டார்கள். பட்டாபி அன்று ஆபீஸிற்கே வரவில்லை என்றார்கள்.

ஏதேனும் விபத்தாக இருக்குமோ..? போலீஸில் — ஆஸ்பத்திரியில் கூட எந்தத் தகவலும் கிடைக்கவில்லை.

இந்தத் தடவை பட்டாபி சொன்னதைச் செயலாக்க ஒரு தீவிரத்துடன் புறப்பட்டிருந்தான்.

சந்நியாசி ஆவது என்ன சிரமம்... உடையை மாற்றிக் கொள்ள வேண்டியது. ஏதாவது மடத்தில் போய்ச் சேர்ந்து அவர்கள் சொன்ன வேலையைச் செய்ய வேண்டும்... வயிறு நிரம்ப இரண்டு வேளைச் சாப்பாடு போதுமே!

கர்நாடகத்திலிருந்து ஒரு ஸ்வாமிகள் அவன் ஊரில் முகாம் இட்டிருந்தார். நவராத்திரி பூஜை, பெரிய ஹோமம், மற்றும் விசேஷ ஆராதனைகள் நடைபெற்றன. பட்டாபி போயிருந்தான். காலையில் டிபன். பகலில் வடை பாயசத்துடன் சாப்பாடு. சுகமான வாழ்க்கைதான்!

ஸ்வாமிகள் நன்றாகத் தமிழில் பேசினார். பட்டாபி அவருக்கு நன்கு அறிமுகம் ஆனான்.

இப்போது அவரைத் தேடிக் கொண்டுதான் புறப்பட்டான். இரண்டு மூன்று இடத்தில் பஸ் மாறி மடத்தை அடைந்த போது, ஸ்வாமிகள் இருந்தார். பட்டாபியையும் அடையாளம் கண்டுகொண்டார்.

''எத்தனை நாட்கள் தங்கப் போகிறாய்?'' எனக் கேட்டார்.

ஜனனி











''நிரந்தரமாக!'' என்றான் பட்டாபி. ''எனக்குச் சம்சார வாழ்க்கை அலுத்து விட்டது. நான் இங்கேயே சம்சார பந்தத்தை உதறிவிட்டு இருக்கலாம் எனப் புறப்பட்டு வந்து விட்டேன். மடத்திற்குப் பாரமாக இருக்க மாட்டேன். எந்தவிதமான வேலை கொடுத்தாலும்...''

ஸ்வாமிகள் யோசித்தார்.

''இது ஒரு வேகத்தில் எடுக்கிற முடிவில்லை... துறவு என்பது சாதாரண விஷயம் இல்லை. எல்லாப் பற்றும் விட்டுப் போகும் வயது உனக்கு ஆ க வி ல் லை. இந்த வாழ்க்கைக்கு மாறுவது சிரமமான காரியம். இங்கு பல சந்நியாசிகள் இருக்கிறார்கள். அவர்களுடன் இருந்து பார். ஒரு மாதம் கழித்து...''

''மன்னிக்க வேண்டும். இந்த யோசனை எனக்கு இன்று நேற்றுத் தோன்றவில்லை. ரொம்ப நாட்களாகவே...''

''அப்புறம் உன் விருப்பம். நாளைக் காலையில் நதிக்கரையில் உனக்குத் தீட்சை'' என்றார்.

அன்று இரவு பட்டாபிக்கு ஏக உபசாரம். போதும் போதும் என்ற அளவிற்குச் சாப்பிடச் செய்தார்கள்.

பட்டாபி தங்குவதற்குத் தனி அறை தரப்பட்டது. நாளைக்கு இந்நேரம் அவனுக்கு உலக பந்தங்களிலிருந்து பூரண விடுதலை. பெண்ணின் கல்யாணத்தைப் பற்றியோ, பிள்ளைகள் படிப்பு, வேலையைப் பற்றியோ கவலை இல்லை. அப்பாவின் கண் ஆபரேஷன்.. அம்மாவின் மூட்டு வாதம் இனிமேல் அவன் காதுகளில் போட்டுக் கொள்ள வேண்டாம்! நிம்மதியாகத் தூங்க ஆரம்பித்தான்.

பிரயாண அசதியில் நன்கு தூங்கிக் கொண்டிருந்தவனை யாரோ தட்டி எழுப்பினார்கள்.

''உஸ்... பங்கஜம்.. இரண்டு நாட்களாகத் தூக்கம் இல்லை. கொஞ்சம் நிம்மதியாகத் தூங்க விடேன்!'' என மறுபுறம் திரும்பிப் படுத்துத் தூங்க ஆரம்பித்தான்.

முதுகில் வேகமாக விழுந்தது இன்னொரு தட்டு. ''எழுந்திருங்கள்.. தீட்சைக்கு நேரமாகி விட்டது!'' என யாரோ எழுப்பினார்கள்.

பட்டாபி எழுந்து உட்கார்ந்து மலங்க மலங்க விழித்தான்.

''போய் முகத்தைக் கழுவி விட்டு வாருங்கள்!'' என்றார் ஒரு சந்நியாசி.

''காப்பி எங்கே கிடைக்கும்?''

எழுப்ப வந்தவர் சிரித்தார். ''இனிமேல் காப்பி, டீ போன்ற லாகிரி வஸ்துக்களை நீங்கள் சாப்பிடக் கூடாது'' என்றார்.

பட்டாபிக்குச் சப்பென்று போய்விட்டது. ஒரு நாளைக்கு மூன்று காப்பி, ஆறு டீ சாப்பிட்டுப் பழக்கம்! ''சரி... சாப்பிடா விட்டால் என்ன? உடம்புக்கு நல்லது தானே?'' எனத் தன்னைச் சமாளித்துக் கொண்டான்.

அவன் முகம் கழுவிக் கொண்டு வரும் போது ஒரு மணை போடப்பட்டிருந்தது.

''உட்காருங்கள்... ஆகட்டும்!'' என்றார்கள்.

''எதற்கு?'' எனக் கேட்டவன் முகம் பேயறைந்தது போல் ஆயிற்று.

அங்கே ஒரு சவரத் தொழிலாளி கத்தியை சாணைக் கல்லில் தீட்டிக் கொண்டிருந்தார். இருபது வயதிலிருந்து பார்த்துப் பார்த்து வளர்த்த அழகான தலையலங்காரத்திற்குக் 'குட்—பை'யா? எத்தனை சிரத்தையாக 'டிரிம்' செய்த மீசை கூடக் கிடையாதா?

''இது அவசியம்தானா? தாடி மீசையுடன் எத்தனையோ சாமியார்கள்?''

''அவர்கள் லெளகீக சாமியார்கள். இதைக் கூடத் துறக்க முடியாதவன் எப்படித் துறவியாக முடியும்?''

பட்டாபி உட்கார்ந்தான். சுருள் சுருளாக மடியில் விழுந்த முடிக் கற்றையைக் கண்ணீர் மல்கத் தடவிப் பார்த்தான்.

''உடைகளையெல்லாம் அவிழ்த்து விட்டு ஒரு துண்டு மட்டும் கட்டிக் கொள்ளுங்கள்'' என அடுத்த உத்தரவு பிறந்தது.

''ஐயையோ ரொம்பக் குளிருமே...''

''இன்றைக்கு அப்படித்தான் இருக்கும்.. நாளைக்குச் சரியாகி விடும்..'' எனப் பதில் வந்தது.

அவர் சொன்னபடியே புறப்பட்டான்.

நதிக் கரையில் பெரியவர் காத்திருந்தார். என்னென்னமோ சடங்குகள். கால் விரல்களை மீன்கள் பதம் பார்க்க வெடவெடத்துப் போய் நதியில் நின்றான் பட்டாபி.

இடுப்பில் ஒரு காவி. மேலே ஒரு காவி. மொட்டைத் தலை. நெற்றியில் திருநீறு — பட்டாபி பாஸ்கரானந்தாவாகப் புதுப் பிறவி எடுத்தான்.

மடத்திற்குத் திரும்பி வந்தவுடன் பக்கத்தில் இருந்தவரைக் ''காலை உணவு எப்போது?'' எனக் கேட்டான்.

''அதெல்லாம் சம்சாரிகளுக்கு... நமக்கெல்லாம் பூஜை முடிந்த பிறகுதான்...''

பட்டாபிக்கு வயிற்றில் பசி கொன்றது. ஸ்வாமிகள் பூஜையை முடிக்கும் போது பகல் பன்னிரண்டு மணி. அப்புறம் அவர்கள் கொடுத்த ஆகாரம் கால் வயிற்றுக்குக் கூடப் போதாது!

ஊராக இருந்தால் இத்தனை நேரம் காலை சாப்பாடு முடிந்து பங்கஜம் வகை வகையாகப் பண்ணித் தந்த டிபனைச் சாப்பிடும் நேரம்.

பட்டாபி தீர்மானித்துக் கொண்டான். சுவாமிகளிடம் தனியாகப் பேசித் தனக்கு ஏதாவது சலுகைகள் உண்டா எனக் கேட்க வேண்டும்.

ஆகாரம் முடிந்தவுடன் பாய், தலையணை தேடினான்.

''பகலில் தூங்குபவர்களைக் கண்டால் ஸ்வாமிகளுக்குப் பிடிக்காது. அப்படியே சுவற்றில் சாய்ந்து ஓய்வு எடுங்கள்!'' எனப் பதில் வந்தது.

பகல் இரண்டு மணிக்கு மறுபடி குளிக்கச் சொன்னார்கள்.

''எதற்கு?'' எனக் கேட்டான் பட்டாபி.

''இதுதான் வழக்கம்... இப்போது வேத பாடம். சீக்கிரம் போங்கள்!''

இரண்டு மணி நேரம் சப்பணமிட்டு உட்கார்ந்து வேத பாடம் கேட்க வேண்டி வந்தது. பாடம் புரிந்ததோ இல்லையோ, தொடை இரண்டும் வலித்தது.

மாலையில் மறுபடியும் குளியல். பட்டாபிக்குத் தொண்டைக் கட்டிக் கொண்டு தலையை வலித்தது.

இரவு பூஜை முடிந்த பிறகு 'சொற்ப' ஆகாரம்.. இரண்டு வாழைப் பழங்கள். ஒரு கோப்பைக் கஞ்சி.

படுக்கையாவது நன்றாக இருந்ததா?

கீழே ஒரு காவி வேஷ்டி. தலையணை ஏதும் கிடையாது. முழங்கையை மடித்து வைத்துக் கொண்டு படுக்கை. தூக்கம்

அறவே வரவில்லை.

இரவு எத்தனை நேரம் ஆனாலும் பங்கஜம் சுடச் சுடப் பாலுடன் வருவாள். வெற்றிலை மடித்துத் தருவாள். காலை இதமாகப் பிடித்து விடுவாள்.

கொஞ்சம் இருமினால் போதும். அப்பா அம்மாவை விரட்ட... அம்மா அதிமதுரம், சித்தரத்தை போட்ட கஷாயம் வைத்துக் கொடுப்பாள்.

மடிப்புக் கலையாத பாண்ட், சட்டை போட்டுக்கொண்டுதான் ஆபீஸ் போவான். பெரியவன் மறக்காமல் தினமும் இஸ்திரி போட்டு வைத்திருப்பான்.

என்ன மடத்தனம் செய்து விட்டான்? தனக்காகப் பரிவு காட்ட அத்தனை பேர் இருக்கையில், அவன் ஏன் ஓடி வர வேண்டும்! பணம் அதிகமாகச் செலவழிக்கிறார்கள். உண்மைதான். இருக்கிறது... செலவு செய்கிறார்கள். சேர்த்து வைத்து என்ன செய்யப் போகிறாய்?

சொல்லாமல் கொள்ளாமல் ஊர் திரும்புவதுதான் விவேகம். பட்டாபி மெதுவாக எழுந்தான். கீழே விரித்திருந்த துணியை முக்காடு போல் போர்த்திக் கொண்டான். மடத்தை விட்டு வெளியே நடந்தான்.

வாசலில் கூர்க்கா இவனைப் பார்த்து விட்டான். ''சோர் சோர்'' எனக் கூப்பாடு போட, திமுதிமுவென்று ஓடி வந்தார்கள். திருடனென நினைத்து அவனைப் பிடித்து மாறி மாறி அடித்தார்கள்.

''ஐயோ... என்னை விட்டு விடுங்கள். என்னை விட்டு விடுங்கள்!'' எனக் கதறினான் பட்டாபி. ●

**தோ**ள் பட்டையை யாரோ பிடித்து உலுக்க, விழித்துக் கொண்டான்.

''என்ன, ஏதாவது கனாக் கண்டீர்களா? '' என்று கேட்டார் ஸ்வாமிஜி.

பட்டாபிக்குப் புரிந்தது. மடத்துக்கு வந்து இரவு உண்டு படுத்தவன்தான். பயண அசதியில் நன்கு தூங்கியிருக்கிறான். விடியற்காலையில் கனவு கண்டிருக்கிறான்.... அத்தனையும் கனவுதானா?

ஆமாம், உடலில் காவி உடை இல்லை. மேலுதட்டில் மீசை... தலை முடியெல்லாம் அப்படியே இருக்கிறதே!

தன்னைச் சுற்றிப் பல சந்நியாசிகள்....

''தீட்சைக்குக் கிளம்பலாமா? அல்லது வீட்டுக்குத் திரும்பலாமா? '' என்று கேட்டார் சுவாமிஜி, அருள் புன்னகையுடன்.

''ஐ ஆம் ஸாரி!'' என்றான் பட்டாபி அசடு வழிய.

'இங்கு ஸாரி சொன்னால் மட்டும் போதாது. வீட்டில் உள்ள ஒவ்வொருவரிடமும் சொல்ல வேண்டும்!' எனத் தீர்மானித்தான்.

* காலத்தின் கட்டளை...



* கலியுக மேனகை





* விரிவான அறிக்கை...

*** வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சாவூர்.**

**? 'போஃபோர்ஸ் பீரங்கி பேரத்துக்கு நிதி அமைச்சர் என்ற முறையில் வி. பி. சிங் ஒப்புதல் அளித்தார் என்று ஆடிட்டர் ஜெனரல் அறிக்கையில் கூறப்பட்டுள்ளது. இதனால்தான் அறிக்கை மீதான விவாதத்தில் பங்கு பெற எதிர்க்கட்சியினர் பயப்படுகின்றனர்' என்று நிதித் துறை இணை அமைச்சர் அஜீத் பாஞ்சா கூறியிருக்கிறாரே?**

! இது முட்டாள்தனமான வாதம் என்பதை சி. எஸ்ஸின் விரிவான அறிக்கை உறுதிப்படுத்துகிறது. முதலாவதாக, ஒவ்வோர் அமைச்சரவையும் வாங்கும் பொருள்கள் தரமானவைதானா, நியாயமான முறையில் வாங்கப்படுகிறதா என்றெல்லாம் பார்த்துக் கொண்டிருக்க நிதி அமைச்சரவைக்கு நேரமோ அல்லது அதிகாரிகளின் படையோ இல்லை என்பது ஒருபுறமிருக்க, ஒவ்வொன்றையும் உரசிப் பார்த்துக் கொண்டிருந்தால் அது இதர அமைச்சரவைகளின் பொறுப்புக்களில் தலையிடுவது போலாகும். இரண்டாவதாக, வி. பி. சிங் இதற்குப் பொறுப்பேற்க வேண்டும் என்று இன்று ஆட்சியிலுள்ளோர் கூறும்போது ஆடிட்டர் ஜெனரல் அறிக்கையில் கூறப்பட்டுள்ள குற்றங்குறைகள் நடந்திருப்பதாக ஒப்புக் கொண்டவர்களாகிறார்கள்! ஒவ்வோர் அமைச்சரவைக்கும் தரக்கட்டுப்பாட்டுக்கான விதிமுறைகள் உள்ளன. அவற்றை போஃபோர்ஸ் விஷயத்தில் பாதுகாப்பு அமைச்சரவை கடைப்பிடிக்கவில்லை என்பதோடு அதையொட்டி ஊழல்களும் நடந்திருக்கின்றன என்பதைத்தான் ஆடிட்டர் ஜெனரல் அறிக்கை தெளிவாக்குகிறது.

* தார்மீகப் பொறுப்பு.



*** அர. மணிவண்ணன், சென்னை – 16.**

**? என். டி. ஆரின் விசுவாமித்திரர் படத்துக்குப் போட்டியாக இ. காங்கிரஸ் கலியுக விசுவாமித்திரர் படம் தயாரிக்கிறதே?**

! கலியுக மேனகை யார்? தீபாவா?

*** லீலா ராம், தக்கலை.**

**? ஜப்பான் தேர்தல் முடிவுகள் எதைக் காட்டுகிறது?**

! அண்மையில் நடந்த தேர்தல் மேல் சபைக்கு. மக்கள் சபைக்கு அல்ல. மக்கள் சபையில் ஆளும் கட்சிக்கு மிகப் பெரும்பான்மை பலம் இருக்கிறது. மேல் சபை கொண்டு வரக்கூடிய மசோதாக்களை மக்கள் சபை நிராகரிக்க முடியும். ஆயினும் மேல் சபைத் தேர்தலில் பல இடங்களை ஆளும் கட்சி இழந்து விட்டதற்குத் தார்மீகப் பொறுப்பு ஏற்றுப் பிரதமர் ஸோஸுகே உனோ ராஜினாமா செய்திருக்கிறார் என்பது கவனிக்கத்தக்கது. அவர் ஒரு கெய்ஷா பெண்ணுடன் தொடர்பு கொண்டிருந்தார் என்பதாகக் கொண்டு வரப்பட்ட குற்றச்சாட்டுதான் இந்த மேல் சபைத் தேர்தல் தோல்விக்குக் காரணம் என்பதாகக் கருதப்படுகிறது. ஆக மொத்தத்தில் ஆரோக்கியமான ஜனநாயகம் என்பது சட்டங்களின் அடிப்படையில் மட்டும் செயல்படுவதல்ல; மனச்சாட்சியும் தார்மீக நோக்கும், சீரிய மரபுகளும் அதற்குப் பக்கபலம் என்பதை ஜப்பான் தேர்தல் முடிவு உணர்த்துகிறது.

*** கே. பி. பிரதாப்சிங், அரசண்டநல்லூர்.**

**? பாரதிராஜாவால் சாதிக்க முடிந்தது எது? பாக்யராஜால் சாதிக்க முடியாதது எது?**

! பாரதிராஜா சாதித்தது. தமிழ் சினி

## பாரதிராஜா சாதித்ததும் பாக்யராஜ் சாதிக்காததும் எது?

## நீங்கள் கேட்டவை — தராசு

மாவை ஸ்டுடியோக்களிலிருந்து கிராமப் புறங்களுக்குக் கொண்டு சென்றது. பாக்ய ராஜால் சாதிக்க முடியாதது, ஆபாசம் இல்லாத தமிழ்ப் படம் தயாரிப்பது.

* **எம். பரந்தாமன், ஆம்பூர்.**

? **ஜெத்மலானியை 'சி. ஐ. ஏ. நாய்' என்றும், 'தேச விரோதி' என்றும் பாண்டே நாடாளுமன்றத்திலேயே கூறியுள்ளாரே?**

! நல்ல வேளையாகத் துணை சபாநாயகர், ஜெத்மலானி மீது சுமத்தப்பட்ட அத்தனை அவதூறுகளையும் அவைக் குறிப்பிலிருந்து நீக்கச் செய்து, மாநிலங்களவையின் மானத்தை ஓரளவேனும் காப்பாற்றியிருக்கிறார்.

* **ராஜேந்தர் பிரியன், திருச்சி.**

? **'என் தங்கையை'ப் 'புரட்சித் தலைவி' என அழைப்பதில் பெருமிதம் கொள்கிறேன்' என்று வீரப்பன் பேசியுள்ளாரே?**

! காலத்தின் கட்டளைதான், வேறென்ன?

* **எம். சுந்தர், பாளையங்கோட்டை.**

? **'தி. மு. க. எம். பிக்கள் ராஜினாமா செய்தது போல், தி. மு. க. எம். எல். ஏக்களும் ராஜினாமா செய்து தமிழகத்தில் தேர்தலைச் சந்திக்கத் தயாரா?' என்று காங்கிரஸ் கேட்கிறதே?**

! இடிக்கிறதே? அப்படிப் பார்க்கப் போனால் இங்கே அ. தி. மு. க. — காங்கிரஸ் எம். எல். ஏக்கள் அல்லவா ராஜினாமா செய்ய வேண்டும்!

* **திருமதி உஷா கிருஷ்ணமூர்த்தி, சென்னை.**

? **வாரத்தில் எத்தனை தடவை மட்டன் சாப்பிடுவீர்கள்?**

! சரியாப் போச்சு. இப்போதுதான் இங்கே கோலாகலமாக 'வெஜிடேரியன் காங்கிரஸ்' நடந்து முடிந்திருக்கிறது. இந்தச் சமயத்தில் இப்படி ஒரு கேள்வியா? நல்ல வேளை, வெஜிடேரியன் மாநாட்டில், 'முட்டைக்கும் வந்த ஆபத்து ஓட்டோடு போயிற்றே' என்று ஆறுதல் அடையுங்கள்!

* **எம். பிரபு, குமராட்சி.**

? **நீங்கள் ஆத்திகரா? நாத்திகரா?**

! இறையுணர்வுடன் இணைந்த சமூக உணர்வுடன் வாழ்வது ஆத்திகம் என்றால் நான் ஆத்திகன். மூட நம்பிக்கைகளை ஒதுக்குவது நாத்திகம் என்றால் நான் நாத்திகன்.

* **பாக்கியமுத்து, திருச்சி.**

? **'எதிர்க்கட்சியினர் அர்ஜுனனாக இருக்க வேண்டும்' என்று அருண் ஷோரி கூறியிருக்கிறாரே?**



* — சாதிக்க முடிந்தது...



* சாதிக்க முடியாதது...

! இந்தப் பஞ்சப் பாண்டவர்களை ஒற்றுமையாக இருக்கச் செய்யக் கண்ணனால் கூட முடியாது போலிருக்கிறதே!

* **எஸ். குருசாமி, சென்னை — 44.**

? **இலங்கையில் இந்தியப் படை வீரர்களுக்குப் பிரபாகரன் கிடைக்கவில்லை; இதனால் வாபசாகும் இந்தியப் படைக்கு அபவாதம் ஏதுமில்லை எனலாமா?**

! ஒரு சில அசம்பாவிதங்கள் நடந்திருப்பினும் அமைதிப்படை தனது பணியை மிகச் சிறப்பாக நிறைவேற்றி நமது பாராட்டைப் பெருமளவில் பெறுகிறது. 'விடுதலைப் புலிகளைச் சுற்றி வளைத்துத் தீர்த்துக் கட்ட இந்திய ராணுவத்தால் ஏன் முடியவில்லை?' என்று பலர் எண்ணுகிறார்கள். அமைதிப்படை அங்கே முழுமூச்சான யுத்தம் நடத்தவில்லை என்பதும், விடுதலைப் புலிகளை நிராயுதபாணிகளாக்குவதே அதன் பணி என்பதும் மறக்கப்படுகிறது. அமைதிப் படையினர் புலிகளால் தாக்கப்படும் போது மட்டும்தான் எதிர்த்தாக்குதல் நடத்திப் புலிகள் பலர் இறந்திருக்கின்றனர். நமது வீரர்களும் வீர மரணம் அடைந்திருக்கின்றனர். வேண்டாத வம்பை விலைக்கு வாங்கிக் கொண்ட ராஜீவின் அரசியலை வேணுமானால் நாம் குறை கூறலாமே யொழிய, இந்திய ராணுவத்தையல்ல.

* **ம. செந்தில்நாதன், மதுரை.**

? **'சாதி ஒழிய வேண்டும் என்பதுதான் எங்கள் கடைசிக் கொள்கை' என்கிறாரே வன்னியர் சங்க நிறுவனர் ராமதாஸ்?**

! முதல் கொள்கையாக விளங்க வேண்டிய ஒன்றை எல்லாக் கட்சிகளுமே அரசியல் காரணங்களுக்காகக் கடைசிக் கொள்கையாக்கியிருப்பதுதான் நமது பிரச்னைகள் பலவற்றுக்கும் அடிப்படைக் காரணம்.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

லீலா ராம்,
16/38, லக்ஷ்மி சதனம்,
மார்க்கெட் ரோடு,
தக்கலை — 629 175.

# "அல்வா செய்ய லோன் கேட்டிருக்கிறோம்!"

• ஜெயந்தி நடராஜனும், வரதராஜனும் பங்கு பெற்ற 'பஞ்சாயத் ராஜ்' விவாத உரையாடல் பஞ்சாயத் ராஜின் சாதக, பாதகங்களைத் தெரிந்து கொள்ள உதவியது. ஜெயந்தியின் வாதங்களைவிட வரதராஜனின் வாதங்களில் அழுத்தத்தையும் கருத்துச் செறிவையும் பார்க்க முடிந்தது.

சென்னை. — 80.
எல். சங்கரநாராயணன்.

• அப்படிப் போடு...! கவர்னரும் கலெக்டரும் அரசுக்குக் குறிப்பாக மத்திய அரசுக்கு 'ஏஜெண்ட்'டுன்னுதான் இருந்தோம். ஜெயந்தி நடராஜன் அவர்களை 'போஸ்ட்மேன்' பதவிக்கே கொண்டு வந்துட்டாங்களே!

பாபநாசம். ப. மணிமுடி.

• ஒரு தோசையின் விலை ரூ. 2.50 ஆக இருக்கும் போது கல்கியின் விலை ரூ. 2.50 ஒன்றும் அதிகமில்லை ஸார்! ஒரு குடும்பப் பத்திரிகையை ரூ. 2.50 கொடுத்து வாங்குவதில் திருப்தியே அடைகிறோம்.

சீர்காழி. எஸ். பிரகாஷ்.

• ஆபாசத்திற்கு இடமளிக்காமல் தரமான சிறுகதை, தொடர்கதைகளையும், மக்கள் பிரச்னை தொடர்பான பேட்டிகளையும், கட்டுரைகளையும் தந்து வருவதோடு பல இளம் படைப்பாளர்களையும் உருவாக்கி, ஊக்கி வளர்த்து வரும் 'கல்கி'க்கு எங்கள் ஆதரவு என்றும் உண்டு. இந்த ஐம்பது காசு விலை உயர்வு வாசகர்களுக்கு ஒரு பொருட்டே அல்ல.

திருக்குவளை.
வெற்றிப் பேரொளி.

• ஆரஞ்சுத்தோல் அல்வா செய்யும் முறையைப் படித்த என் கணவர் 'அல்வா லோன் கொடுக்க முடியுமா?' எனக் கேட்டு வங்கிக்குச் சென்றிருக்கிறார். லோன் வந்த பிறகு செய்ய உத்தேசம்!

சீர்காழி. எஸ். புவனா.

• தி. மு. கழக உறுப்பினர் என்கிற முறையில் சொல்கிறேன். ஜெயலலிதா கட்சியுடன் வீரப்பன் இணைப்பைச் சுட்டிக் காட்டித் தி. மு. கழக ஆட்சியாளர்கள் எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டும் என்று எழுதப்பட்டிருந்த தலையங்கத்தைப் பாராட்டி வரவேற்கிறேன்.

பெங்களூர் — 21. ப. மூர்த்தி.

• ஆர். எம். வீ. கோஷ்டியினர் ஜெ.விடம் தஞ்சம் புகுந்ததை 'சூப்பர் பல்டி' என்று நையாண்டி செய்ததுடன், நல்ல பல யோசனைகளையும் கூறித் தலையங்கத்தை முடித்த விதம் சூப்பர்.

அயன்புரம்.
த. சத்தியநாராயணன்.

• சகலகலா சம்பந்தி படத்திற்கு நீர் எழுதியிருந்த விமர்சனத்தை விட படத்தின் தலைப்புக்குக் கொடுத்திருந்த விளக்கம் அற்புதம்!"

வேலூர் — 1. லட்சுமி நரசிம்மன்.

• சங்கரி அப்பன் எழுதிய "வெளிச்சத்தை நோக்கி ஒரு பயணம்" சிறுகதை ரியலி சூப்பர்ப். கடைசியில் இருவரும் ஒவ்வொரு விதத்தில் ஊனம் என்று எழுதியுள்ள விதம் மனத்தைக் கனக்கச் செய்தது.

திருச்சி — 6. எஸ். கண்ணன்.

• அண்ணி ஸ்வர்ணா தன் நாத்தனார் கவிதாவின் ஆசையை நிறைவேற்றித் தனது வேதனையைச் சிரிப்பாய் மாற்றிக் கொண்ட மனப்பாங்கு எல்லா அண்ணிகளுக்கும் வந்தால் எத்தனை நன்றாய் இருக்கும்!

மேட்டுப்பாளையம். பி. ஏ. வஹாத்.

• நகைச்சுவை சொட்டச் சொட்ட அ. வின்சென்ட் எழுதிய "தலைவர் அய்யாவு" சிறுகதையைப் படித்துச் சிரித்துச் சிரித்து மகிழ்ந்தேன்.

திருப்பரங்குன்றம்.
எஸ். மந்திரமூர்த்தி.

• ஜெயராதனின் 'நிழல் தேடும் மரங்கள்' சிறுகதை அருமை. 'நாவுக்கரசின் பிள்ளை' என்று அழைப்பதைவிட 'சுரேந்திரனின் அப்பா' என்று அழைப்பதைக் கேட்க, சந்தோஷப்படும் நினைதயாளனின் தந்தை உள்ளம் போற்றத்தக்கது.

கோவை. ஏ. ஜி. கல்யாணசுந்தரம்.

• தற்போது கல்கி சிறந்த சிறுகதைகளை வெளியிட்டுச் சிறுகதைகளின் சிகரமாக வளர்ந்து வருவது மகிழ்ச்சியளிக்கிறது.

திருவிடைமருதூர்.
எஸ். நாதன் பாபு.

• கடந்த வாரக் கல்கியில், 'என்னுயிர்த் தோழன்' தொடர்கதையில், நள்ளிரவில் சிட்டுவும், தென்னவனும் ரயில் ஏறிச் சென்னை நோக்கி வருவதாக எழுதப்பட்டுள்ளது. ஆனால் எந்த ஊர் ஸ்டேஷனில் ஸ்வாமி, நள்ளிரவில் வரும் ரயிலுக்கு அக்குளில் சிவப்புக் கொடியை வைத்துக் கொண்டு பச்சைக் கொடி காட்டுவார் ஸ்டேஷன் மாஸ்டர்?

காஞ்சிபுரம். க. பத்மநாபன்.

• 'மெக்கா யாத்திரை' என்ற தலைப்பில் தரப்பட்ட செய்திகள் சவூதி அரேபியாவின் சில கோணங்களை விளக்கிற்று. ஆனால், 'மெக்கா' என்பது தவறு. 'மக்கா' என்பதே சரியான உச்சரிப்பு முறை.

நீடூர்.
அ. முஹம்மது நிஜாமுத்தீன்.

• தராசு பதில்களில் 'மாசேதுங் போல...' என்றால் அதற்கு 'ஜெ'யின் படத்தைத்தான் போட வேண்டுமா? தேடிப் பிடித்து மாசேதுங் படத்தைப் போட்டிருக்கக் கூடாதா?

முடிகொண்ட நல்லூர்.
க. ராஜேந்திரன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

உங்கள் குழந்தைக்கு ஊட்டுங்கள் காய்கறிகளின் சிறந்த சத்தூட்டத்தை!




# ஃபாரெக்ஸ்®-வெஜ்

## 6 மாதம் முதல்

புதிய ஃபாரெக்ஸ்-வெஜ். இது, வைட்டமின் வளம் செறிந்த காய்கறிகளான காரட், தக்காளி மற்றும் பச்சைப் பயற்றின் இயற்கையான ஊட்டச்சத்துக்களைக் கொண்டதாகும்.

இது, நன்ருக, முன்பே - பக்குவப்படுத்தப்பட்டது. ஆகவே இது, குழந்தையின் மென்மையான வயிற்றின் ஜீரண சக்திக்கு ஏற்றதாகும்.

**ஃபாரெக்ஸ்—சுவையுடன் வளரும் வழி**




**இதோ ஃபாரெக்ஸ் வளர்ச்சி வழி: 1. பால் சேர்த்த ஃபாரெக்ஸ் சீரியல் 2. ஃபாரெக்ஸ்-வெஜ் 3. ஃபாரெக்ஸ்-**

GX/57/2

gistered as Newspaper in Srilanka